296

ஸ்ரீரங்கம் வித்யாபிவிருத்தி ஸபை ஸஞ்சிகை—1

296
1·28










॥ ஸ்ரீ: ॥

॥ ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம: ॥

ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் அருளிச்செய்த

॥ ஸ்ரீ அபயப்ரதாநஸார: ॥

# ஸ்ரீ அபயப்ரதானஸாரம்.

இது

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்

பண்டித பூஷணம் மஹாமஹோபாத்யாய

**ஸ்ரீ.உப. வே. நரஸிம்மாசார்யர் ஸ்வாமியினால்**

ஸகலரும் ஸுலபமாய் அறிந்து உஜ்ஜீவிப்பதற்காக மிகவும் எளிதான

தமிழ் நடையில் எழுதப்பெற்ற வ்யாக்யானத்துடன்

ஸ்ரீரங்கம் ராயகுரு கோடிகன்னிகாதானம் எழுதிருமாளிகை

ஸ்ரீ. உப. ஐயா யாமுனதாதாசார்யரால்

பரிசோதிக்கப்பட்டு

ஸ்ரீரங்கம் ஸ்ரீவேதாந்ததேசிக விலாஸம் என்கிற வித்யாபிவ்ருத்தி ஸபை

மானேஜரான ஸ்ரீமான் மாராடி ரே. பாபுரேட்டி என்கிற

வேதாந்ததேசிக ராமானுஜதாஸரால் ப்ரசுரம் செய்யப்பட்டது.

கோயில் பிரஸ், சென்னை.

1927. [தபாற்கூலி வேறு.

Q22
N27.
183665





॥ 𑌶𑍍𑌰𑍀𑌃 ॥

॥ 𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍇 𑌨𑌿𑌗𑌮𑌾𑌨𑍍𑌤𑌮𑌹𑌾𑌦𑍇𑌶𑌿𑌕𑌾𑌯 𑌨𑌮𑌃 ॥

ஸ்ரீமந்நிகமாந்த மஹா தேசிகன் அருளிச்செய்த

॥ 𑌶𑍍𑌰𑍀 𑌅𑌭𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌸𑌾𑌰𑌃 ॥

# ஸ்ரீ அபயப்ரதானஸாரம்.

## தனியன்கள்.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌾𑌨𑍍 𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌃 𑌕𑌵𑌿𑌤𑌾𑌰𑍍𑌕𑌿𑌕𑌕𑍇𑌸𑌰𑍀 ।
𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌵𑌰𑍍𑌯𑍋 𑌮𑍇 𑌸𑌨𑍍𑌨𑌿𑌧𑌤𑍍𑌤𑌾𑌂 𑌸𑌦𑌾 𑌹𑍃𑌦𑌿 ॥

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑌭𑍂𑌷𑌣𑌂 ।
𑌶𑍍𑌰𑍀𑌮𑌦𑍍𑌵𑍇𑌙𑍍𑌕𑌟𑌨𑌾𑌥𑌾𑌰𑍍𑌯𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌵𑍇𑌦𑌾𑌨𑍍𑌤𑌦𑍇𑌶𑌿𑌕𑌂 ॥

சீரொன்று தூப்புல் திருவேங்கடமுடையான்
பாரொன்றச் சொன்ன பழமொழியுள் — ஓரொன்று
தானேயமையாதோ தாரணியில் வாழ்வார்க்கு
வானேறப் போமளவும் வாழ்வு.

𑌵𑌾𑌲𑍍𑌮𑍀𑌕𑌿𑌵𑌚𑌸𑌾𑌮𑌰𑍍𑌥𑌂 𑌸𑌂𑌗𑍃𑌹𑍍𑌯 𑌵𑍍𑌯𑌾𑌕𑌰𑍋𑌤𑌿 𑌯𑌃 ।
𑌅𑌭𑌯𑌪𑍍𑌰𑌦𑌾𑌨𑌸𑌾𑌰𑍇 𑌸𑍋𑌵𑍍𑌯𑌾𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌜𑍍𑌞𑌦𑍇𑌶𑌿𑌕𑌃 ॥

---

## ॥ 𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑌾𑌵𑌤𑌾𑌰𑌃 𑌪𑍍𑌰𑌥𑌮𑍋𑌧𑌿𑌕𑌾𑌰𑌃 ॥

𑌜𑌯𑌤𑍍𑌯𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌸𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌸𑌧𑍍𑌵𑌾𑌨𑍍𑌤𑌵𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌨𑍋𑌦𑌯𑌃 ।
𑌪𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌨𑍍 𑌸𑍀𑌤𑌯𑌾 𑌦𑍇𑌵𑍍𑌯𑌾 𑌪𑌰𑌮𑌵𑍍𑌯𑍋𑌮𑌭𑌾𑌸𑍍𑌕𑌰𑌃 ॥

॥ श्रीः ॥

॥ तार्क्ष्यशैलवनद्रि श्रीहेमाब्जनायिकासमेत
श्रीदेवनायकपरब्रह्मणे नमः ॥

॥ श्रीमते वकुलभूषण महागुरवे नमः ॥

॥ श्रीमते भगवते भाष्यकाराय नमः ॥

॥ श्रीमते निगमान्तमहादेशिकाय नमः ॥

॥ श्रीमते श्रीनिवासरामानुजमहादेशिकाय नमः ॥

திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
பண்டித பூஷணம் மஹாமஹோபாத்யாய

## ஸ்ரீ உ.ப. வே நரஸிம்மாசார்யர் ஸ்வாமியின்

# ஸ்ரீ அபயப்ரதான ஸார வ்யாக்யானம்.

## ஸ்ரீ அவதாரிகை.

ஸ்ரிய:பதியான ஸர்வேஸ்வரன் இவ்வுலகத்தில் எல்லாச்சேதனர்களையும் உஜ்ஜீவிக்கச் செய்வதற்காக 'सम्भवामि युगे युगे' (ஸாதுக்களைக் காப்பாற்றுவதற்காக அந்தந்தக் காலங்களில் நான் அவதரிக்கிறேன்) என்று தானே அருளிச்செய்திருக்கிறபடியே தம்முடைய திவ்ய கண்டை என்கிற வ்யாஜத்தை முன்னிட்டு 'वेङ्कटेशावतारोऽयं' என்றும், 'அன்றிவ்வுலகினையாக்கி அரும்பொருள் நூல் விரித்து நின்று தண்ணீள்புகழ் வேங்கடமாமலை மேவிப்பின்னும் வென்றிபுகழ் திருவேங்கடநாதன் என்னும் குருவாய்' என்றும் சொல்லுகிறபடியே இவ்வுலகத்தில் அவதீர்ணரானது கொண்டு தூப்புல் திருவேங்கடமுடையான் என்று திருநாமம் பெற்று 'रामानुजदयापात्रं' என்கிறபடியே பகவான் முதலாக ஸாக்ஷாத் ஆசார்யரான ஸ்ரீகிடாம்பிராமானுஜாசார்யர்(அப்புள்ளார்)வரையிலான எல்லா ஆசார்யர்களுடைய கருபைக்குப் பாத்திரபூதரும், இவ்வுலகுக்கெல்லாம் நாமரூபங்களை உண்டாக்கின ஸ்ரிய:பதியினாலேயே உபயவேதாந்தாசார்யர் என்கிற அஸாதாரணமான குணக்ருதமான திரு

நாமத்தை உடையவருமான இவ்வாசார்யன் ஶரணாகதி வேதம் என்று தாமே நிஷ்கர்ஷித்திருக்கிற ஸ்ரீமத்ராமாயணத்தில் ஸபரிகரமான ப்ரபத்தியையும், அப்படி ப்ரபத்தவ்யனான ஸர்வேஶ்வரனுடைய குணங்களையும், அப்படி அவன் திருவடிகளில் செய்யும் ப்ரபத்தியின் ப்ரபாவத்தையும், அப்படிப்பட்ட ப்ரபன்னன் விஷயத்தில் பகவானுடைய அபிப்ராய விஶேஷங்களையும் அவனுடைய க்ருத்யவிஶேஷங்களையும் ப்ரதிபாதிக்கிறபடியினாலே வேதங்களுக்கு உபநிஷத்துப் போல் ஶரணாகதி வேதமாகிற ஸ்ரீராமாயணத்திற்கு உபநிஷத் ஸ்தானத்தில் நிற்கும்படியான விபீஷண ஶரணாகதி ப்ரகரணத்திற்கு வ்யாக்யானம் செய்தருள உபக்ரமித்து ஸ்ரீராமாயணத்தில் ப்ரதிபாதிக்கப்படும் பரமதத்வஹித புருஷார்த்தங்களை யதாவத்தாக ஸங்க்ரஹமாக நிரூபித்தருளுகிறார். அதில் முற்பட பரதத்வம், பரமஹிதம், பரம புருஷார்த்தம் இவைகளை மூன்று ஶ்லோகங்களால் க்ரமமாக 'இஷ்டம் ஹி விதுஷாம் லோகே ஸமாஸவ்யாஸதாரணம்' (இவ்வுலகத்தில் பண்டிதர்களுக்கு முதலில் சுருக்கமாகச் சொல்லி, பிறகு அதை மேல் விஸ்தாரமாக ப்ரதிபாதிப்பதே இஷ்டமானது) என்கிற ந்யாயத்தை அனுஸரித்து ஸங்க்ரஹித்தருளுகிறார். அதில் முதல் ஶ்லோகம் பரதத்வஸங்க்ரஹம். அதில் அர்த்தாத் ஸ்ரீமத்ராமாயண கதையும் ஸங்க்ரஹிக்கப்படுகிறது.

[ப - ரை] **ஆஶ்ரித** - தன்னை ஆஶ்ரயித்தவர்களுடைய அதாவது தன்னிடத்தில் ஶரணாகதி செய்தவர்களுடைய, **ஸம்ஸார** - பயமாகிற, **த்வாந்த** - இருட்டை, **வித்வம்ஸந** - போக்கடிப்பதையே ஸ்வபாவமாக உடைய, **உதய:** - உதயத்தை உடையவராயும், அதாவது அவதாரத்தை உடையவராயும் என்றபடி, **ஸீதயா** - ஸீதையாகிற, **தேவ்யா** - தேவியினால், **ப்ரபாவான்** - காந்தியையுடையவராயும் இருக்கிற, **பரமவ்யோம** - பரமாகாஶம் என்னப்படும் பரமபதத்திற்கு, **பாஸ்கர:** - ஸூர்யனாகிய பெருமாள், **ஜயதி** - வெற்றிபெற்று விளங்குகிறார்.

[தா-ம்] - இந்த ஒரு ஶ்லோகத்தில் ஸ்ரீராமாயணம் முழுமையும் ஸங்க்ரஹிக்கப்பட்டதாகிறது. '**ஆஶ்ரிதஸம்ஸாரத்வாந்தவித்வம்**

ஸமெநாஜய:' என்பதினால் ராவணனால் பீடிக்கப்பட்ட தேவதைகள் பகவானை ஶரணமடைய அதைப்போக்கடிப்பதற்காக அவதாரம் செய்ததும், அந்த ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றுவதற்காக கைகேயியின் வரப்ரதானம் என்கிற வ்யாஜத்தை இட்டுத்தான் கானகம் ஏகியதும், அங்குதன்னுடைய ஸேவையையே எதிர்பார்த்திருந்த சபரி, சரபங்கர் முதலியவர்களை அனுக்ரஹித்ததும், அவர்களுக்கு விரோதம் செய்த விராதகபந்தாதி ராக்ஷஸர்களை மடித்ததும், அவதாரத்திற்கு அவாந்திர ப்ரயோஜனமானவற்றில் முக்யமான ராவணனை பந்துக்களுடன் நாசஞ் செய்ததுமான வ்ருத்தாந்தங்கள் ஸங்க்ரஹிக்கப்பட்டு முதல் ஆறுகாண்டங்களின் அர்த்தம் நிரூபிக்கப்பட்டதாயிற்று. 'ஹூலா வாலு ஸீதயா' என்பதினால்ஸீதா கல்யாண வ்ருத்தாந்தம்(ஸ்பஷ்டமாக) அருளிச்செய்யப்பப்பட்டதாகிறது. 'ஸரசெவ்யாசஹாஸ்க்ஷர:' என்பதினால் அவதார ஸமாபனம் செய்து தன்னுடைச் சோதிக்கு எழுந்தருளின ப்ரகாரத்தை நிரூபிக்கும் உத்தரகாண்டத்தின் அர்த்தம்ஸங்க்ரஹிக்கப்பட்டதாயிற்று.

'ஆஶ்ரித' என்பதினால் ராவணனைக் கொல்லுவதற்காக லோகத்தில் அவதரிக்கவேண்டும் என்று ஶரணாகதிசெய்த தேவதைகளும், பகவானிடத்தில் விஶேஷபக்தியைச் செய்துகொண்டு எப்பொழுது அவனுடைய ஸேவைகிடைக்கும் என்றிருந்த ஸாதுக்களும் சொல்லப்படுகிறார்கள். 'த்ராஸ' என்றால் பயம். இது ஆந்தரம் என்றும் பாஹ்யம் என்றும், இரண்டு விதமாயிருக்கும். ஆந்தர பயமாவது பகவானுடைய ஸேவை ஒருக்ஷண காலமாவது தங்களுடைய மானஸானுபவத்தில் இல்லாவிடில் தங்களுடைய ஆத்மாவையே தரிக்கமுடியாமல் இருப்பதும்; தங்களுடைய த்யானத்திற்கு விஷயமான பகவானை எப்பொழுது நேரில் ஸேவித்து க்ருதார்த்தர்களாவோம் என்கிற எண்ணத்தினால் உண்டான பயமும். பாஹ்யபயமாவது கீழ்க் கூறியவர்களுக்கும், தேவதைகளுக்கும் ராக்ஷஸர்களினுடைய உபத்திரவத்தினால் உண்டாக்கப்பட்டதாய் ஶரீரத்திற்கு நேரிட்ட பீடை முதலியவைகள். இதின் விஸ்தாரத்தை ஸ்ரீமத்கீதாபாஷ்ய தாத்பர்யசந்திரிகையில் விஸ்தாரமாக நிரூபித்திருப்பதைக் கண்டுகொள்வது. 'யஸ்ய ஸ்ம்ருதம் க்ஷணம் வாஸி வாஸவோ...

வொ ந விஷ்யெத । ஸா ஹாநி: தத்ர ஹவிஷ்யம் ஸா ஹ்ராஸிஸாவ விக்ரியா ॥', 'க்ஷணேவ தெ யதிரஹோதிஷ்ஸஹ:' என்றும், 'எம்பெருமானுக்குத் திருநாட்டிலும் கூட இருக்கவொண்ணுததொரு படி பெரிய ஆர்த்தியோடு கூப்பிடுகிறுர்' என்றும் இவர்களுடைய ஆந்தரபயத்தின் ப்ரகாரம் பரக்கப் பேசப்பட்டதிறே. 'விஷ்வம்ஸ ந' என்கிற இடத்தில் 'வி' என்கிற உபஸர்க்கம் போக்கடிக்கப்பட்ட பயம் மறுபடியும் உண்டாகாது என்பதைத் தெரிவிக்கிறது. 'உதய:' என்பதினுல் 'த்ருஷ்ட வனவ ஹி நஶ்லோகஸ்வெநெஷ்யதி ராகவ: । தஸ்ஸாம்பஸ்ய லோகஸ்ய ஸூர்யஸ்யெவ ஹாஸ்கர: ॥' என்கிற ஶ்லோகத்தின் அர்த்தம் ஸூசிதமாய் பகவானுடைய ஸேவை மாத்திரத்தினுல் ஸாதுக்களின் பயம் நீங்கினமை சொல்லப்பட்டதாகிறது. 'ஜநகாத்மஜயா ஸஹ' என்பதினுல் ஸீதாகல்யாண வ்ருத்தாந்தம் ஸூசிதம். இத்தால் ஸ்வபாவத்திலேயே நிரவதிக தேஜஸ்ஸையுடைய பகவானுக்குப் பிராட்டியின் ஸம்பந்தத்தினுல் ஏற்பட்ட பெருமையும் ஸர்வோத்க்ருஷ்டத்வமும் காட்டப்பட்டதாகிறது. இத்தால் எப்படி ஸூர்யனும் அவனுடைய ப்ரபையும் ஒரு காலும் பிரிவதில்லையோ அதைப்போல பரதத்வமும் ஒரு மிதுனமாக இருக்கும் என்றதாயிற்று. 'இருள்சேகமெமக்கோர் இன்னெளிவிளக்காய்' என்றிவர் தம்மாலேயே மும்மணிக்கோவையில் அருளிச் செய்யப்பட்டதிறே. 'வரஶரெஹ்ராஹாஸ்கர:' என்றது. 'ஸர்வ்ராஹுர்வ தெஜஸம்' என்றும், 'தெஜஸாம் ராஶிரூர்ஜித:' என்றும், 'க்வெ ராஶிவாகர:' என்றும் மஹரிஷி சொல்லியதும் இதற்கு மூலமான 'அங்கு ஸூர்யன்ப்ரகாசிக்கிறதில்லை' என்ருரம்பிக்கும் ஶ்ருதி முதலியவைகளில் ப்ரதிபாதிக்கப்பட்டதுமான அர்த்தம். ஆக இந்த ஶ்லோகத்தினுல் 'எல்லையில் சீர்தயரதன் தன்மகனய்த் தோன்றிற்றது முதலாத்தன்னுலகம் புக்கதீறு' என்கிறபடியே அவதார ஆரம்பம் முதல்ஸமாபானம்வரையிலாக நடந்த வ்ருத்தாந்தங்கள் எல்லாம் ஸங்க்ரஹிக்கப்பட்டதாகின்றன. 'ஹாஸ்கர:' என்பதற்கு விஶேஷணமாக 'வரஶரெஹ்ர' என்னும் பதத்தை ப்ரயோகித்திருப்பதினுல் கேவலம் வெளியில் இருக்கும் இருட்டை மாத்திரம் கொஞ்சகாலம் போக்கடிக்கும் ஸூர்ய

னுக்கும், மனதிற்குள் இருக்கும் இருட்டாகிய அஜ்ஞானத்தை திரும்பி வராதபடி போக்கடிக்கும் பகவானுகிய ஸுர்யனுக்கும் உள்ள வ்யத்யாஸம் தெரிவிக்கப்பட்டதாகிறது. மேலும் ஸாதாரண ஸுர்யனுடைய கிரணம் நமக்குத்தாபத்தை உண்டாக்குகிறது. இந்தஸுர்யனுடைய கிரணமோ நமக்கு ஸம்ஸாரத்தில் உண்டாகிய ஸகலதாபத்தையும் போக்கடிக்கிறது என்பதும் அறியத்தக்கது.

இந்த ஶ்லோகத்திஞல் திருவடி லங்கா பட்டணத்தின் நடுவில் தன்னுேடு யுத்தம் செய்யவந்த ராக்ஷஸர்களை ஜயித்த ஸந்தோஷத்திஞல் 'ஜயத்யதிபலோ ராம:' என்று உத்கோஷித்தாப்போலே தாமும் பத்து இந்திரியங்களாகிற ராவணனைப் பெருமாளுடைய கடாக்ஷத்திஞல் ஜயித்ததிஞல் ஏற்பட்ட உபகாரத்தையே சொல்லி ஸ்தோத்திரம் செய்கிருர். 'காவலில் புலனை வைத்து கலிதன்னைக் கடக்கப் பாய்ந்து காவலிட்டுழி தருகின்றேம் நமன் தமர் தலைகள்மீதே' என்ருரிறே தொண்டரப்பொடியாழ்வாரும். 'காவல்' என்றது ஜயஶப்தம். இத்தால் 'சிலையிஞலிலங்கை செற்ற தேவனே தேவனுவான்' என்கிறபடியே பெருமாளே பரதத்வம் என்பதும் ஸுசிதமாயிற்று. 'யஃஅத்யக்ஷ: ஹரமே வ்யோமந்' என்பதிஞல் 'இந்தப் பிரபஞ்சத்திற்கு எவன் யஜமானனே அவன் பரம வ்யோமத்தில் இருக்கிருன்' என்றர்த்தமுள்ள ஶ்ருதியும், 'ஸுர்யன்போல வர்ணம் உள்ள' என்றர்த்தமுள்ள ஶ்ருதியும் ஜ்ஞாபகப்படுத்தப் பட்டதாகிறது. 'ஹ்ரீஶ்ச தே' இத்யாதியால் 'லக்ஷ்மியும் பூமியும் உனக்குப் பத்னிகள்' என்று தைத்திரீயோபநிஷத்தில் ஶ்ரிய:பதி என்கிற அடையாளத்திஞல் இவன் மற்ற தேவதைகளை விட உயர்ந்தவன் என்று நிரூபித்திருப்பதும், அதையே 'திருக்கண்டேன்' என்று தொடங்கி பேயாழ்வார் அருளிச்செய்திருப்பதும் ஸுசிதமாயிற்று. 'அஜாயமாந' இத்யாதியால் '(நம்மைப்போல் கர்மங்களால்) பிறக்காதவனுய் இருந்தபோதிலும் அனேகம் விதமாக அவதரிக்கிருன், அதின் காரணத்தைப் புத்திமான்களுக்குள் சிறந்தவர்கள் அறிந்துகொள்ளுகிருர்கள்' என்கிற ஶ்ருதியின் தாத்பர்யமும் புருஷஸுக்தாதிகளில் நிர்த்தாரணம் செய்திருக்கிறபடி நிரூபித்தருளப்பட்டிருக்கிறது என்றறியத்தக்கது. இத்தால் க்ரந்தாரம்பத்

ப்ராய: ப்ரபதநே பும்ஸாம் பௌந:புந்யம் நிவாரயந்
ஹஸ்த: ஸ்ரீரங்கநாதஸ்ய மாமவ்யாதபயமுத்ரித: ‖ [யநு

---

தில் ஶிஷ்டாசாரத்தை அனுஸரித்துச் செய்யவேண்டிய மங்களா சரணமும் செய்யப்பட்டதாயிற்று.

இப்படி பாதத்வத்தை நிரூபித்து அவ்விடத்தில் 'ஆஶ்ரித ஸஞ்ஜாத' என்பதினால் ஸூசிப்பிக்கப்பட்ட பரமஹித மான ப்ரபத்தியை ஸங்க்ரஹமாக நிரூபித்தருளுகிறார். 'ப்ராய:' என்றாரம்பித்து.

[ப - ரை.] பும்ஸாம் - புருஷர்களுடைய, அதாவது ஜீவாத் மாக்களுடைய, ப்ரபதநே - ப்ரபத்தியில், பௌந:புந்யம் - மறுபடியும் செய்வதை, ப்ராய: நிவாரயந் - தடுப்பதுபோல் இருக் கிற, அபயமுத்ரித: - அபயமுத்ரையையுடைய, ஸ்ரீரங்கநாதஸ்ய - ஸ்ரீரங்கநாதனுடைய, ஹஸ்த:(வலது) திருக்கை, மாம் - என்னை, அவ்யாத் - ரக்ஷிக்கவேண்டும்.

இந்த ஶ்லோகத்தினால் 'ஸக்ருதேவ ப்ரபந்நாய தவாஸ்மீதி ச யாசதே | அபயம் ஸர்வபூதேப்யோ ததாம்யேதத் வ்ரதம் மம ‖' என்கிற ஶ்லோகம் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது. இதில் 'பும் ஸாம்' என்று ஜீவாத்மாக்களைப் பொதுவாக அருளிச்செய்திருப்ப தினால் ப்ரபத்தி ஸர்வாதிகாரம் என்பதும், 'பௌந:புந்யம்' என்பதினால் ஒருபலத்தைக் குறித்து ஒரு தடவைதான் செய்யவேண் டும் என்பதும், 'அபயமுத்ரித:' என்பதினால் எந்தெந்த இஷ்ட பலம் கிடைக்காமையினால் பயப்படுகிறானோ அந்த எல்லாப் பயங் களையும் நிவ்ருத்திசெய்கிறான் என்றேற்படுகிறபடியினாலே ஸர்வ பலஸாதனம் என்பதுமாகிற ப்ரபத்தியின் ப்ரபாவங்கள் அருளிச் செய்யப்பட்டதாகின்றன. 'மாமவ்யாத்' என்பதினால் அந்த அபயமுத்ரையையே தஞ்சமாக நம்பியிருப்பது ஸூசிப்பிக்கப்பட்ட தாகிறது. ஸ்ரீதேவநாயக பஞ்சாஶத்தில் 'நித்யாபயப்ரதக்ருதே ஹ்ருதயே மதீயே ததாஸ்யம் ஸ்மரதி தக்ஷிணபாணிபத்மம்' என் றருளிச்செய்திருப்பதும் 'உமதடிகள் அடைகின்றேனென்றொருகாலு

நமஸ்ஸ்தாத் கஸ்மைசந மஹதே நிஷ்கிஞ்சநஜந
ஸ்வயம் ரக்ஷாதீக்ஷாஸமதிகஸமிந்தாநயஶஸே ।
ஸுநாஸீரஸ்வைரக்ஷணகுபிதஶாபாயுதவதூ
த்ருஷத்தாதுர்ஜாதப்ரஶமநபதாம்போஜரஜஸே ॥

---

த்தவரை அமையும் இனி என்பவர்போல் அஞ்சலிஹஸ்தம் வைத்து'என்று அடைக்கலப்பத்தில் அருளிச்செய்திருப்பதும் இங்கனுஸந்தேயம். இத்தால் இந்த ப்ரபத்தி ஸர்வாதிகாரமானதாலும் ஒரு தடவை செய்யவேண்டியதாகையினாலும், எல்லா இஷ்ட பலங்களையும் கொடுக்கக்கூடியதாகையினாலும் பரமஹிதம் என்னப்படுகிறது என்பது த்யோதிதமாயிற்று.

இப்படி 'ஸர்வாபீஷ்டப்ரதத:' என்கிற பதங்களினால் ஸூசிப்பிக்கப்பட்ட பரம புருஷார்த்தத்தை ஸங்க்ரஹித்தருளுகிறார்:— 'நமஸ்ஸ்தாத்' இத்யாதி.

[ப - ரை.] நிஷ்கிஞ்சந - அகிஞ்சனர்களான, ஜந - ஜனங்களை அன்றிக்கே, நிஷ்கிஞ்சநஜந - நிஷ்கிஞ்சனர்களான ப்ரபந்நர்களை ஆஶ்ரயித்த ஜனங்களை என்று பொருளாகவுமாம், ஸ்வயம்ரக்ஷா - தானே ரக்ஷிப்பதில், தீக்ஷா - தீக்ஷையினால், அதையே வ்ரதமாகக் கொண்டிருப்பதனால், ஸமதிக - மிகவும் அதிகமாக, ஸமிந்தாந - வ்ருத்தியடைந்திருக்கிற, யஶஸே - கீர்த்தியையுடையவராயும், ஸுநாஸீர - தேவேந்திரனோடு, ஸ்வைர - தன் இஷ்டப்படி இருந்த, க்ஷண - காலத்தில், குபித - கோபத்தை யடைந்தவரான, அன்றிக்கே தேவேந்திரனுடைய, ஸ்வைர - இச்சைப்படி, க்ஷண - தான் ஒரு வ்யாபாரமும் செய்யாதவளான, அதாவது தடுக்காமல் இருந்த, ஶாபாயுத - ஶாபத்தையே ஆயுதமாக உடைய கௌதம ரிஷியினுடைய, வதூ - பத்னியாகிய அஹல்யையின், த்ருஷத்தா - கல்லாயிருக்கையாகிற, துர்ஜாத - கெட்ட ஜன்மத்தை, ப்ரஶமந - போக்கடிக்கிற, பதாம்போஜ - தாமரை புஷ்பங்கள் போன்ற திருவடிகளினுடைய, ரஜஸே - தூளியை உடையவராயும் இருக்கிற, கஸ்மைசந - ஒரு அளவிட்டுச் சொல்லமுடியாத மஹி

மையையுடைய என்றபடி, ஒப்பற்ற என்றபடியாகவுமாம், தஸ்மை - அந்தப் பெருமாளின் பொருட்டு, நம: - என்னுடைய நமஸ்கார மானது, ஸ்வஸ்தி - ஆகட்டும், அதாவது அவரை நான் நமஸ்கரிக் கிறேன் என்றபடி.

'ஸ்வயம்ரக்ஷாதீக்ஷா' என்பதினால் ஆஸ்ரிதர்களை ரக்ஷிப்பதைத் தன் பேறாக நினைத்திருப்பதும், தானே உபாயாந்தரஸ்தானத்தில் நின்று ரக்ஷிக்கிறான் என்பதும் த்யோதிதம். அப்படி ரக்ஷிப்பதினால் அவருடைய கீர்த்தி மேல் மேல் ஓங்கி வளர்ந்து நிற்கிறது என்பது விவக்ஷிதம். அன்றிக்கே இப்படி ஆஸ்ரிதர்களை ரக்ஷிப்பதையே தனக்கு வ்ரதமாகக் கொண்டிருக்கிறான் என்கிற விஷயத்தில் மிகவும் ப்ரஸித்தமான யஸஸ்ஸை (கீர்த்தியை) உடையவர் என்று தாத் பர்யமாகவுமாம். அப்பொழுது 'விதிதஸ்ஸஹி யத்ரஜ்ஞ: ஸரணாகதவத்ஸல:' (அவன் ஸரணாகதர்களிடத்தில் இருக்கும் தோஷத் தைப் பாராமல் ரக்ஷிக்கிறான் என்பது மிகவும் ப்ரஸித்தமல்லவா) என்ற பிராட்டியின் வாக்யமும், 'தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்' (ஆஸ்ரிதனுக்குத் தோஷம் இருந்தாலும் இருக்கட்டும், அப்படி இருந்தவனை ரக்ஷிப்பது பெரியோர்களுக்கு மிகவும் கொண்டாடக் கூடிய விஷயமாகும்) என்கிற பெருமாள் பாசுரமும் ஸூசித மாயிற்று. 'நிஷ்கிஞ்சநஜந' என்பதினால் நிஷ்கிஞ்சனர்களான ஸர ணாகதர்களை ஆஸ்ரயித்திருக்குமவர்கள் என்கிற யோஜனையில் ஆஸ் ரிதனான விபீஷணனையும், அவனுடன் கூடவந்த நாலு ராக்ஷஸர் களையும் ரக்ஷித்தமை சொல்லப்பட்டதாகிறது. இத்தால் கேசவன் தமரில் 'மாசதிரிது பெற்று நம்முடைய வாழ்வு வாய்க்கின்றவா' என்றருளிச் செய்தபடியே தன் அனுபந்திபர்யந்தம் ரக்ஷணம் பெறு கையாகிற புருஷார்த்தத்தின் பெருமை அருளிச்செய்யப்பட்டதா யிற்று. ப்ரபன்னனுக்கு (அகிஞ்சனனுக்கு) ப்ரபத்தியினால் வஸீகரிக் கப்பட்ட எம்பெருமான் உபாயாந்தரஸ்தானத்தில் நிற்பதாகிய பல மும் ஸூசிதமாயிற்று. 'ஸூராயீஸ' இத்யாதி - திருவடி ஸம்பந் தம்பெற்ற தூசிபட்ட மாத்திரத்தினால் அஹல்யையின் ஸாபமும், அதற்குக் காரணமான பாபமும் நிவ்ருத்தியடைந்ததென்றால் அவன் திருவடிகளை ஆஸ்ரயித்தவர்களுக்கு ஸர்வபாப நிவ்ருத்தி உண்டாகும் என்பதும், அவன் திருவடியை ஆஸ்ரயித்தவர்களாய் ஜ்ஞானாதிகுண

**சோகந்தவிர்க்கும் சுருதிப்பொருளொன்றுசொல்லுகின்றேன்**
**நாகந்தனக்குமிராக்கதர்க்கும் நமக்குஞ்சரணும்**
**ஆகண்டலன்மகனுகியவாவலிப்பேறியதோர்**
**காகம்பிழைத்திடக் கண்ணழிவே செய்த காகுத்தனே.**

---

பூர்ணர்களான ஆசார்யர்களின் திருவடிகளை ஆஶ்ரயித்தவர்களுக்கும்
பாபநிவர்த்தன ஶக்தி உண்டென்பதும் கைமுதிக ந்யாய ஸித்தம்.
இத்தால் தங்களுக்கும் தங்கள் அநுபந்திகளுக்கும் ஸர்வபாவ நிவ்
ருத்தியை முன்னிட்டு உண்டாகும் மோக்ஷம் பரம புருஷார்த்தம்
என்றதாயிற்று.

இப்படி ஸாத்யோபாயோபேயங்களை நிரூபித்து மேல் ஐந்தா
வது ஆறுவது எழாவது அதிகாரங்களில் அருளிச்செய்யப்படப்
போகிற ஸ்வபாவ விஶேஷங்களையுடைய ஸித்தோபாயோபேய பூத
னும் இந்த சக்கரவர்த்தித் திருமகனே என்று அருளிச்செய்கிறார்.
அன்றிக்கே கீழ் ஶ்லோகத்தில் ஶரணாகதர்களுடைய ஸர்வா நிஷ்
டங்களையும் நிவ்ருத்தி செய்து ஸர்வேஷ்ட பலங்களையும் கொடுத்
தருளுவான் என்று நிரூபித்த பிறகு 'எல்லாப் பாபங்களிலுமிருந்
தும் விடுவிக்கிறேன் நீ துக்கப்படாதே' (ஸர்வபாபேப்யோ மோ
க்ஷயிஷ்யாமி மா ஶுச:) என்று அருளிச்செய்தவன் ஸ்ரீ கிருஷ்ண
னுயிருக்க சக்கரவர்த்தித் திருமகன் இப்படிச் செய்தருளுவான் என்
பது எங்ஙனே என்ன அவனும் இவனே என்று ஸமாதானம் அரு
ளிச் செய்கிறாராகவுமாம்—'சோகம் தவிர்க்கும்' என்றாரம்பித்து.

[ப - ரை.] சோகம் - துக்கத்தை, தவிர்க்கும் - போக்கடிக்கிற,
சுருதிப்பொருள் - வேதத்தின் அர்த்தமாகிய, ஒன்று - ஒரு வஸ்து
வை, சொல்லுகின்றேன், அது எது என்னில், ஆகண்டலன்-தேவேந்
திரனுக்கு, மகனாகிய - புத்திரனாகிய, ஆவலிப்பு - கர்வம், ஏறியது-
அடைந்ததாகிய, அன்றிக்கே கர்வத்தினால் அதிகமான, ஓர் - ஒப்
பற்ற, காகம் - காக்கை, பிழைத்திட - பிழைத்துப் போம்படியாக,
கண்ணழிவே - ஒரு கண்ணுக்கு அழிவை மாத்திரம், செய்த, காகுத்
தனே - ககுத்ஸ்தவம்ஶத்தில் பிறந்தவரான சக்ரவர்த்தித் திரு
மகனே, நாகம் தனக்கும - ஸுமுகன் என்கிற பாம்புக்கும், அன்
றிக்கே கஜேந்திரனுக்கும், இராக்கதர்க்கும் - ராக்ஷஸனாகிய விபீஷண

னுக்கும், அவனுடன் கூடவந்த ராக்ஷஸர்களுக்கும், நமக்கும், சரணம்- ஸித்தோபாயமாவான்.

---

[தா-ம்.] 'மாஶுச:' (துக்கப்படாதே) என்றருளிச்செய்தவன் இவனேயாகையினாலும், 'த்ருஷ்டஏவ ஹி நஶ்ஶோகமபநேஷ்யதி ராகவ:' (பார்த்த மாத்திரத்தினாலேயே நம்முடைய துக்கத்தையெல்லாம் ஸ்ரீராமன் போக்கடித்துவிடுவார்) என்று ப்ரஸித்தனானையினாலும் 'சோகம் தவிர்க்கும்' என்று அருளிச்செய்யப்பட்டிருக்கிறது என்றறியத்தக்கது. 'சுருதிப்பொருள்' என்றது 'வேதோபப்ரும்ஹணார்த்தாய' என்கிறபடியே ஸ்ரீமத் ராமாயணம் வேதத்தில் சொல்லப்படும் அர்த்தத்தையே விஶதமாக நிரூபிக்க ப்ரவ்ருத்தித்தபடியினால் இதில் சொல்லப்படும் பரதத்வாதிகளே வேதத்தின் தாத்பர்யம் என்றபடி. 'வேதவேத்யே பரே பும்ஸி ஜாதே தஶரதாத்மஜே । வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா' (வேதங்களினால் அறியப்படும் பரமாத்மா சக்ரவர்த்தித் திருமகனாய் அவதரித்த காலத்தில் வேதம் வால்மீகி மகரிஷியிடமிருந்து ராமாயணமாய் அவதரித்தது) இத்யாதி இங்கனு ஸந்தேயம். 'ஒன்று' என்பதினால் உபாயமாயும் உபேயமாயும் இருக்கிற வஸ்து ஒன்று என்பது தெரிவிக்கப்படுகிறது. அன்றிக்கே இப்படி ஸித்தோபாயமாக இருக்கிற விஷயத்தில் இதற்கு ஒப்பு சொல்லக்கூடியது ஒன்றுமில்லை என்றபடியாகவுமாம். 'சொல்லுகின்றேன்' என்பதினால் கேட்பவர்களை ஸாவதானத்துடன் கேட்கும்படி செய்கிறார். அன்றிக்கே அவர்களைத் தேர்ந்து சிந்தாமல் கொள்ளும்படி நியமிக்கிறாராகவுமாம். 'ஆகண்டலன்மகனாகிய' என்பதினால் தேவேந்திரனுடைய பிள்ளையாகிய ஜயந்தனை இப்படிப் பிராட்டியின் இடத்தில் அபசாரப்பட்டான் என்று சிலர் அபிப்ராயப்பட்டிருப்பது ஸ்ரீமத் ராமாயணத்தில் அப்படிச் சொல்லப்படவில்லை யாகையினாலும், ஆஸுர ஸ்வபாவத்தினால் மாம்ஸத்தை சாப்பிட விரும்பினான் என்றே சொல்லப்பட்டிருப்பதினாலும், 'வாயுஸ்ய ஸமோ கதௌ' (வேகமாகப் பறப்பதில் வாயுவிற்கு ஸமன்) என்றும், 'காகமாத்ரே' (கேவலம் காக்கையினிடத்தில்) என்றும் அருளிச் செய்யப்பட்டிருப்பதினாலும், வாலியைப்போல இது ஜன்மத்தினாலேயே காகமாய் இந்திரனுக்குப்

பிறந்த ஒருவன் என்று ஸ்ரீஸ்தோத்திர பாஷ்யத்தில் நிஷ்கர்ஷிக்கப் பட்டிருப்பதினாலும் விலக்கப்பட்டதாகிறது. 'ஆவலிப்பேறிய' என் பதினால் அதிக கர்வத்தை அடைந்தது. அவ்வளவு ஆஸுர ஸ்வபாவ மான கர்வம் இல்லாவிடில் இப்படிப்பட்ட அபசாரத்தில் ப்ரவ்ருத்தி த்திராது என்பது த்யோதிதம், அப்படிச் செய்தாலும் ருத்திரக் கை யோடு பெருமாள் திருமுன்பே நின்றிராது. அப்படிப்பட்ட அதிக மான கர்வத்தை அடக்குவதற்காகவே ஸங்கல்பித்து ப்ரும்மாஸ்திர ப்ரயோகம் செய்தபடியினால் அந்தத் திருவுள்ளத்தை அடியொத்தின அஸ்திரமும் காகத்தை உடனே கொல்லாமல் அக்கர்வம் அடங்கி பெருமாள் முன்பு ஓய்ந்துவிழும் வரையில் பின் துரத்திக்கொண்டே சென்றது என்பதும் அறியத்தக்கது. 'ஓர் காகம்' என்றது அப சாரத்தில் ஒப்பற்ற காக்கை, ராவணாதிகளும் அபசாரத்தில் இக் காகத்திற்கு ஸமமாக மாட்டார்கள் என்றபடி. அன்றிக்கே 'காக ஊர்தெ'என்று பிராட்டி அருளிச்செய்தபடியே ஒருபெரிய சத்ருவன் றிக்கே கேவலம் ஒரு காக்கை என்றாகவுமாம். 'பிழைத்திடக் கண் ணழிவே செய்த' என்பதற்கு ப்ராணரக்ஷணை காகத்திற்கு ஶிக்ஷை யாக ஒரு கண்ணை வாங்கினதும் இப்பொழுது நாம் ப்ராணனைத் தப்ப வைத்தாலும் இதற்கு வாஸ்தவத்தில் கர்வஹானி அனுதாபாதி கள் உண்டாகாமையினால் இது வேறு யாரிடமாவது அபசாரம் செய் யும், அப்பொழுது அவர்கள் இதின் ப்ராணனைப் போக்கி விடுவார் கள், ஆகையினால் இப்பொழுது காப்பாற்றின ப்ராணன் வ்யர்த்த மாகிவிடும் என்று கொண்டு இது எப்பொழுதும் உயிரோடிருக்க வேண்டும், அதற்குக் காரணமாக ஒரு கண்ணை அபஹரித்தால் அதை ஜ்ஞாபகத்தில் கொண்டு அபசாரம் செய்யாமல் இருக்கும் என்று திருவுள்ளம். 'அழிவே' என்கிற இடத்தில் ஏகாரத்தினால் அது ப்ராணனை மாத்திரம் ப்ரார்த்தித்தபடியினால் அதை ரக்ஷித்தபடி யினாலே பலம் பூர்ணமாயிற்று என்பதும் தெரிவிக்கப்படுகிறது. இவ் விடத்தில் 'தனிக் காகம்தான் இரந்த உயிர் வழங்கிக் காவலினி எமக்கு எங்கும் கடன் என்றெண்ணி காண நில்லிலச்சினை அன்றிட் டவள்ளல்' என்று இந்த க்ரந்தத்திலேயே உபஸம்ஹரித்திருப்பதும், 'கூவெ காகலெவெஷு்கூ ஹிதஜிதி ஹிநவிஷ நயஜ' என்று

ஒருக்காலே சரணாக வடைகின்றார்க்கு
முனக்கடிமை யாகின்றே னென்கின்றார்க்கும்
அருக்காதே யனைவர்க்கு மனைவராலு
மஞ்சேலென் றருள்கொடுப்ப னிதுதானேதும்
இருக்காலு மெழின்முனிவர் நினைவினாலு
மிவையறிவார் செயலுடனென் னிசைவினாலும்
நெருக்காத நீள்விரத மெனக்கொன் றென்று
நெறியுரைத்தார் நிலையுணர்ந்து நிலைபெற்றாரே.

---

ஸ்ரீ தயாசதகத்தில் அருளிச்செய்திருப்பதும் அநுஸந்தேயங்கள். 'காகுத்தனே' என்றது 'வதார்ஹமபி காகுத்ஸ்த: க்ருபயா பர்யபாலயத்' (கொல்லப்படுவதற்குத் தகுந்தவனா யிருந்தபோதிலும் பெருமாள் க்ருபையினால் அந்தக் காகத்தைக் காப்பாற்றினார்) என்ற க்ருபாதிசயமுடைய அவனே ஸித்தோபாயமாகும், இப்படிப்பட்ட க்ருபை இல்லாதவர்கள் ஸித்தோபாயமாக மாட்டார்கள் என்றபடி. 'நாகந்தனக்கும்' இத்யாதியினால் ஜாதி முதலிய வ்யத்யாஸமின்றிக்கே ஸகலருக்கும் ஸித்தோபாயனாவான் என்பது தெரிவிக்கப்படுகிறது. இவ்விடத்தில் 'சரண்யம் சரணம் ச த்வாமாஹுர் திவ்யா மஹர்ஷய:' (சிறந்த மகரிஷிகள் உம்மையே சரணமடையத் தகுந்தவனாகவும் உபாயமாகவும் சொல்லுகிறார்கள்) இத்யாதி அநுஸந்தேயம்.

இந்த ரஹஸ்யத்தில் ஸ்ரீ விபீஷணசரணாகதி ப்ரகரணத்திற்கு ப்ரதானமாக வ்யாக்யானம் செய்தருளினதற்குக் காரணத்தை ஒரு பாட்டாலே நிரூபித்தருளுகிறார்—'ஒருக்காலே' என்றாரம்பித்து.

[ப-ரை] ஒருக்காலே - ஒருதடவையே, ஏகாரம் இரண்டாவது தரம் வேண்டாம் என்பதைத் தெரிவிக்கிறது, சரணாக - சரணமாக, அடைகின்றார்க்கும் - அடைகிறவர்களுக்கும், உனக்கு, அடிமை - தாஸனாக, ஆகின்றேன் - ஆகிறேன், என்கின்றார்க்கும் - என்றநுஸந்திப்பவர்களுக்கும், அருக்காதே - ஓர் இடத்திலும் சுருக்கமில்லாமல்,

அன்றிக்கே சுருக்கப்படாமல், அனைவர்க்கும் - (ஶரணமாக அடைகிற) எல்லோருக்கும், இதுமேல் 'அருள் கோடுப்பன்' என்பதுடன் அந்வயிக்கிறது, அனைவராலும் - ஸகல ப்ராணிகளாலும், அஞ்சேல் - பயப்படாதே, ஒரு ப்ராணியினிடத்திலிருந்தும் பயப்பட வேண்டாம் என்றபடி, என்று, அருள் கோடுப்பன் - க்ருபையைச் செய்வேன், இதுதான் - இப்படி அபயம் கொடுப்பதுதான், ஓதும்-(த்ரைவணிகர்களினால்) அத்யயனம் செய்யப்படுகிற, இருக்காலும் - வேதத்தினாலும், எழில் - தேஜஸ்ஸோடுகூடிய, முனிவர் - ரிஷிகளுடைய, நினைவினாலும் - ஸ்ம்ருதிகளினாலும், இவை - இந்த ஶ்ருதி ஸ்ம்ருதிகளை, அறிவார் - அறிந்தவர்களுடைய, செயலுடன் - ஆசாரத்துடன், என் - என்னுடைய, இசைவினாலும் - ப்ரீதியுடன் கூடின அங்கீகாரத்தினாலும், நேருக்காத - ஒருவராலும் எந்தக் காலத்திலும் எந்த விதத்திலும் தடுக்கமுடியாத, ஒன்று - ஒப்பற்றதான, நீள் விரதம் - நீண்ட விரதம் நெடுங்காலமாய் அனுஷ்டித்து வரப்படும் வ்ரதம், எனக்கு, என்று, நேறி - ப்ரபத்தி மார்க்கத்தை, உரைத்தார் - உபதேசித்த சக்ரவர்த்தித் திருமகனுடைய, நிலை - ப்ரபன்னர்களை ரக்ஷிக்கிறதாகிய தர்மத்தில் நிலைத்திருக்கையை, உணர்ந்து - அறிந்து, நிலை பெற்றோம் - நாமும் அவ்வுபாயத்தில் நிஷ்டையைப் பெற்றோம்.

[தா - ம்.] ஒருக்காலே - ஸக்ருதேவ, சரணாக அடைகின்றார்க்கும் - ப்ரபந்நாய, உனக்கடிமையாகின்றேன் என்கின்றார்க்கும், தவாஸ்மீதி ச யாசதே, 'அருக்காதே' என்பது ஸர்வ பதத்திற்கு ஸங்கோசமில்லை என்றர்த்தாத் ஸித்திப்பதைத் தெரிவிக்கிறது. அனைவர்க்கும் அருள் கோடுப்பன் - 'ஸர்வபூதேப்ய:' என்பதற்குநான்காம் வேற்றுமையாக யோஜனை, அனைவராலும் அஞ்சேல் - ஸர்வபூதேப்ய: என்பதற்கு ஐந்தாம் வேற்றுமையாக யோஜனை, அருள் கோடுப்பன் - ததாமி, இதுதான், 'ஏதத் வ்ரதம் மம' என்பதின் தாத்பர்யார்த்தத்தை விஸ்தாரமாக நிரூபித்தருளக்கோலி தர்மத்திற்கு ப்ரமாணங்களாக, 'ஶ்ருதி: ஸ்ம்ருதி: ஸதாசார: ஸ்வஸ்ய ச ப்ரியமாத்மந: । ஏதச்சதுர்விதம் ப்ராஹு: ஸாக்ஷாத்தர்மஸ்ய லக்ஷணம் ॥'

என்று மனுஸ்ம்ருதி முதலியவைகளில் ஸ்ருதி ஸ்ம்ருதி பெரியோர்களின் அநுஷ்டானம் தன்னுடைய மனதிற்குப் பிரியமாகத்தோற்றினது, இவை நான்கும் நேரிலேயே தர்மத்தைத் தெரிவிக்கக்கூடிய ப்ரமாணங்கள் என்று சொல்லப்பட்டிருக்கும் நான்கும் மேல் இந்த அபயப்ரதான ப்ரகரணத்தில், 'ஜ்ஞெஷ: கூணவஸ்ய' என்றாரம்பித்துப் பெருமாள் பாசுரமாக நிரூபித்திருப்பதைச் சேர்த்து அநுஸந்தித்து அருளிச்செய்கிறார் - 'ஓதும்' இத்யாதியால். 'ஓதும் இருக்காலும்' என்றது அத்யயனம் செய்யப்படாத சில ஸ்ருதிகளில் தேடவேண்டியதில்லாமல் தைத்திரீயம் ஶ்வேதாஶ்வதரம் முதலிய ப்ரஸித்தமான ஸ்ருதிகளிலேயே ப்ரதிபாதிதம் என்றபடி. 'எழில்' என்பது முனிவர்க்கு விசேஷணம், அன்றிக்கே, 'நினைவு'க்கு விசேஷணமாகவுமாம், 'எழில் முனிவர்' என்றது 'ஜ்ஞெஷ: கூணவஸ்யவாசெதூண கூணாநா வஉஷிணா' என்கிறபடியே கண்வ ருஷியின் புத்திரனுக் தானும் பரமரிஷியான கண்டுவினால் என்கிறபடியே பரமாப்தர்களான ரிஷிகள் என்றபடி. 'எழில்நினைவு' என்றது வேதத்திற்கு விருத்தமான கபிலாதி ஸ்ம்ருதிகளன்றிக்கே வேதத்தை அநுஸரித்து 'யஜிஷாம்' என்று கொண்டாடப்பட்ட ஸ்ம்ருதிகளினால் என்றபடி. 'இவையறிவார் செயல்' என்பதினால் ஸதாசார: என்கிற ப்ரமாணம் காட்டப்பட்டது. 'ஸதாசார:' என்றது ஸ்ருதிஸ்ம்ருதிகளை யதாவத்தாக அறிந்து அநுஷ்டிக்கிறவர்களின் ஆசாரம். இவ்விடத்தில் கபோதாதி வ்ருத்தாந்தங்கள் நிரூபிக்கப்பட்டிருப்பது அறியத்தக்கது. என் இசைவினாலும் - 'ஸ்வஸ்ய ச ப்ரியமாத்மந:' என்பது தெரிவிக்கப்பட்டது. 'கபிஷ்ரேஷ்ட கண்வோக்தவசநோத்தமம்' (சிறந்ததாயும் உண்மையானதுமான கண்டு மஹரிஷியின் வசனப்படி நடக்கப்போகிறேன்.) என்னப்பட்டதிறே. 'நெருக்காத நீள்விரதம்' என்றது இதற்கு முன்பும் சரணாகத ஸம்ரக்ஷணம் செய்தது மால்யவான் வ்ருத்தாந்தாதிகளில் ப்ரஸித்தம் என்றபடி. விரதம் எனக்கு-வ்ரதம்மம, 'ஒன்று' என்றது இது ஒப்பற்றது, ஸர்வ தர்மங்களையும் விடச் சிறந்தது என்றபடி. எனக்கு ஒன்று - எனக்கு மற்றைய தர்மங்கள் அநுஷ்டிக்கவேண்டியதில்லையேயாகிலும் இந்த சரணா

1 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய ச துஷ்க்ருதாம் | தர்மஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே

---

கத ஸம்ரக்ஷணமாகிய 'தர்மம் அவச்யம் அநுஷ்டிக்க வேண்டியது என்றபடி. 'நெறியுரைத்தார் நிலையுணர்ந்து' என்றது சரணாகதி தர்மத்தின் பெருமையை விஸ்தாரமாக உபதேசித்து 'ந த்யஜேயம் கதஞ்சந' இத்யாதியால் அந்த சரணாகதனைக் காப்பாற்றுகிற தர்மத்தில் எத்தனையேனும் பரிவாரனாலும் விலக்கவொண்ணாதபடி நிலைபெற்றிருந்தமையை அறிந்தபடியினால் என்றபடி. 'நிலை பெற்றோம்' என்றது அதில் நிலைத்திருப்பதைப் பெற்றோம், அதாவது நிர்ப் பரனாய் நிஸ் ஸம்சயனாய் ஹ்ருஷ்டமனுவுமாய் இருக்கப் பெற்றோம் என்றபடி. இப்படி நாம் நிலை பெற்றிருப்பதற்குக் காரணமான சரண்யனுடைய ஸ்வபாவ விசேஷங்களையும் அபிப்ராய விசேஷங்களையும் விஸ்தாரமாக நிரூபிக்கிற சரண்யனுடைய வாக்ய விசேஷங்களாலே அலங்க்ருதமாக இருக்கிறபடியினால் இந்த அபயப்ரதான கட்டம் அவச்யம் வ்யாக்யானம் செய்யப்பட வேண்டியதாக அங்கீகரிக்கப்பட்டது என்று திருவுள்ளம்.

இனி வ்யாக்யானம் செய்யப்பட வேண்டிய ஸ்ரீமத்ராமாயணம் ப்ரமாணங்களில் முதன்மையானது என்றும், உபப்ரும்மணம் என்று சொல்லப்படுவதற்குக் காரணங்களான லக்ஷணங்கள் இதற்கு அமைந்திருக்கிறது என்றும் நிரூபித்து ஆகையினாலேயே விசேஷித்துத் தாம் அதற்கு வ்யாக்யானஞ்செய்ய ஆரம்பித்தது என்பதையும் ஸூசிப்பித்தருளுகிறார் — 'பரித்ராணாய' என்றாரம்பித்து. 'உபப்ரும்ஹணம் நாம விதிதஸகலவேத தத்வார்த்தாநாம் ஸ்வயோக மஹிமஸாக்ஷாத்க்ருத வேததத்வார்த்தாநாம் பரமர்ஷீணாம் வாக்யைஃ ஸ்வாவகத வேத வாக்யார்த்த விசதீகரணம்' (உபப்ரும்மணமாவது எல்லா வேதங்களையும் அவற்றின் அர்த்தங்களையும் அறிந்தவர்களாயும், தங்களுடைய யோகத்தின் மஹிமையினால் ப்ரத்யக்ஷமாக அறியப்பட்ட

---

1 ஸ்ரீபகவத்கீதை - 4 - 8.

**யுகே யுகே** ||' என்கிறபடியே **ஸர்வேச்வரன்** ஒரு **த்ரேதாயுக**த்திலே **சக்ரவர்த்தி**த் திருமகனா யவதரித்த காலத்திலே **ஸ்ரீவால்மீகி பகவான் ஸர்வஜ்ஞ**ரான **ஸ்ரீ நாரத பகவான்** பக்கலிலே இவ்வவ**தாரவ்ருத்தாந்த**த்தை **ஸம்க்ஷேபேண ச்ரவணம்**

---

எல்லா வேதங்களின் அர்த்தங்களை உடையவர்களாயும் இருப்பவர்களுடைய வாக்யங்களினால் தன்னால் அறியப்பட்ட வேதத்தில் இருக்கும் வாக்யங்களின் அர்த்தங்களை விசதமாக அறிவது) என்றிறே ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்தபடி. அப்படிப்பட்ட லக்ஷணங்கள் இந்த க்ரந்தத்திற்குப் பொருந்தியிருக்கின்றன என்று மேலே நிரூபித்தருளுகிறார். **ஸாதூநாம்** - ஸாதுக்களை, **பரித்ராணாய** - ரக்ஷிப்பதற்காகவும், **துஷ்க்ருதாம்** - பாபிகளுடைய, **விநாசாய** - நாசத்தின் பொருட்டும், **தர்மஸம்ஸ்தாபநார்த்தாய** - தர்மத்தை நன்கு ஸ்தாபிப்பதற்காகவும், **யுகே யுகே** - யுகங்கள் தோறும், **ஸம்பவாமி** - அவதரிக்கிறேன். **சக்ரவர்த்தி**த்திருமகனாய் - தசரத சக்ரவர்த்தியின் திருக்குமாரராய். இத்தால் பகவான் அவதாரம் செய்ததற்கு முக்யமான ப்ரயோஜனம் சரணாகதர்களைக் காப்பாற்றுவதுதான், ஆகையினால் அதை நிரூபிப்பதில் ப்ரதானமான கருத்தை உடையது இப்பிரபந்தம், ஆதலால் உபநிஷத்தில் சொல்லப்பட்ட சரணாகதியாகிய பரம தர்மத்தை நிரூபிப்பதற்காகவே ப்ரவ்ருத்தித்ததாகையினால் அந்த விஷயத்தில் இந்த ஸ்ரீமத்ராமாயணம் முக்யமான ப்ரமாணம் என்றதாயிற்று. இந்த ஸ்ரீமத் ராமாயணத்தை அருளிச்செய்த வால்மீகிபகவான் ஆப்தர், அதாவது உள்ளபடியே அறிந்தவரும், தாம் அறிந்தபடியே சொன்னவரும் என்பதையும் உபப்ரும்மணங்களுக்குச் சொல்லப்பட்டிருக்கும் லக்ஷணங்கள் எல்லாம் பொருந்தியிருக்கிறது என்பதையும் நிரூபித்தருளுகிறார்— '**ஸ்ரீவால்மீகி**' என்றாரம்பித்து. 'அவதரித்த காலத்திலே' என்பதினால் சக்ரவர்த்தித் திருமகன் ராஜ்யபரிபாலனம் செய்துகொண்டிருந்த காலத்திலேயே இக்ரந்தத்தை குசலவர்களைக்கொண்டு பெருமாள் திருமுன்பே பெரிய ஸபையில் கேட்பித்த பெருமையும் இதற்கு உண்டு என்பது தெரிவிக்கப்படுகிறது. **பகவான்** - த்ரி

பண்ணி, 1 'மச்சந்தாதேவ தே ப்ரஹ்மந் ப்ரவ்ருத்தேயம் ஸரஸ்வதீ' என்கிறபடியே ஸரஸ்வதீவல்லபனான ப்ரஹ்மாவினுடைய ப்ரஸாதத்தாலே ப்ரவ்ருத்தமான திவ்ய ஸாரஸ்வதத்தையுடையனுமாய், 2 'ரஹஸ்யம் ச ப்ரகாஶம் ச யத்வ்ருத்தம் தஸ்ய தீமத: | ராமஸ்ய ஸஹ ஸௌமித்ரே: ராக்ஷஸாநாம் ச ஸர்வஶ: || வைதேஹ்யாஶ்சாபி யத்வ்ருத்தம் ப்ரகாஶம் யதி வா ரஹ: | தச்சாப்யவிதிதம் ஸர்வம் விதிதம் தே பவிஷ்யதி || ந தே வாகந்ருதா காவ்யே

---

காலஜ்ஞான முள்ளவர் என்றபடி. வ்ருத்தாந்தத்தை - சரித்திரத்தை, ஸம்க்ஷேபேண - சுருக்கமாக, ஶ்ரவணம் பண்ணி - கேட்டு. ப்ரஹ்மந் - ஓ! ரிஷியே! இயம் - இந்த, ஸரஸ்வதீ - 'மாநிஷாத' என்றாரம்பிக்கும் ஶ்லோகரூபமான வாக்கு, மச்சந்தாதேவ - என்னுடைய உத்திரவினாலேயே, தே - உமக்கு, ப்ரவ்ருத்தா - உண்டாயிற்று வல்லபன் - பர்த்தா. ப்ரஸாதத்தாலே - க்ருபையினாலே. திவ்யஸாரஸ்வதம் - மிகவும் சிறந்த வாக்கு. தஸ்ய - அந்த, தீமத: - மிகவும் சிறந்த புத்தியையுடையவரும், ஸஹஸௌமித்ரே: - ஸௌமித்ரையின் பிள்ளையுடன் (இளைய பெருமாளுடன்) கூடினவருமான, ராமஸ்ய - ராமனுடைய, ரஹஸ்யம் ச - ஏகாந்தமாயும், ப்ரகாஶம் ச - ப்ரகாஶமாயுமுள்ள, வ்ருத்தம் - சரித்திரம், யத் - எதுவோ (அதுவும்), ராக்ஷஸாநாம் ச - ராக்ஷஸர்களினுடைய, ஸர்வஶ: - எல்லா வ்ருத்தாந்தமும், வைதேஹ்யாஶ்சாபி - ஸீதையினுடையவும், ப்ரகாஶம் - ப்ரகாஶமாயும், யதி வா ரஹ: - ரஹஸ்யமாயுமுள்ள, யத் - எந்த, வ்ருத்தம் - சரித்திரமோ, தச்சாபி - அதுவெல்லாமும், அவிதிதம் - மற்றவர்களினால் அறியப்படாத, ஸர்வம் - எல்லாம், தே - உமக்கு, விதிதம் - அறியப்பட்டதாக, பவிஷ்யதி - ஆகப்போகிறது, அத்ர - இந்த, காவ்யே - ஸ்ரீமத் ராமாயணமாகிய காவ்யத்தில், தே - உம்முடைய, காசித் -

---

1 ராமா - பால - 2 - 31     2 ராமா - பால - 2 - 33 34 35

கா வாகந்ருதா ந பவிஷ்யதி |' என்று ப்ரஹ்மாவாலே தத்தவரனுமாய், 1 'ஹஸிதம் பாஷிதம் சைவ கதிர்யா யச்ச சேஷ்டிதம் | தத்ஸர்வம் தர்மவீர்யேண யதாவத் ஸம்ப்ரபச்யதி ||' என்கிறபடியே தர்மவீர்யஸமுத்தமான திவ்யசக்ஷுஸ்ஸாலே இவ்வவதாரவ்ருத்தாந்தத்தை 'பாணாவாமலகம் யதா' என்னும்படி நிரவசேஷமாக ஸாக்ஷாத்கரித்து, 2 'தசேந்த்ரியாநநம் கோரம் யோ மநோரஜநீசரம் | விவேகசரஜாலேந சமம் நயதி யோகிநாம் ||' என்கிறபடியே

---

ஒரு, வாக் - வார்த்தையும், அந்ருதா - பொய்யாக, ந பவிஷ்யதி - ஆகப்போகிறதில்லை. தத்தவரனுமாய் - அளிக்கப்பட்ட வரத்தை உடையவனுமாய், ஹஸிதம் - சிரிப்பும், பாஷிதம் சைவ - பேச்சும், கதி: - நடத்தை, யா - எதுவோ (அதுவும்), சேஷ்டிதம் - (அவர்களுடைய) வ்யாபாரம், யச்ச - எதுவோ, தத்ஸர்வம் - அவை எல்லாவற்றையும், தர்மவீர்யேண - தபஸ்ஸின் மஹிமையினால், யதாவத் - உள்ளபடி, ஸம்ப்ரபச்யதி - நன்றாகப் பார்க்கிறார். தர்மவீர்யஸமுத்தமான - தபஸ்ஸின் மஹிமையினால் உண்டாக்கப்பட்ட, திவ்யசக்ஷுஸ்ஸாலே - மற்றவர்களாலே அறியப்படாதவைகளை யெல்லாம் அறியக்கூடிய சக்தியுடன் கூடிய கண்ணாலே. பாணௌ - கையில் இருக்கும், ஆமலகம் யதா - நெல்லிக்கனியைப் போலே. நிரவசேஷமாக - மிகுதியில்லாமல், அதாவது ஒன்றும் விட்டுப்போகாமல் என்றபடி, ஸாக்ஷாத்கரித்து - ப்ரத்யக்ஷமாகப் பார்த்து. ய: - எந்தப் பகவான், தசேந்த்ரியாநநம் - பத்து இந்திரியங்களான பத்து முகங்களையுடைய, கோரம் - பயங்கரமான, மநோரஜநீசரம் - மனதாகிற ராக்ஷஸனை, ராவணனை என்றபடி, யோகிநாம் - யோகிகளுக்கு, விவேகசரஜாலேந - விவேகமாகிற பாணங்களின் கும்பல்களினால்,

---

1 ராமா. பால. 3 - 4.

முமுக்ஷுவுக்கு பரோபகாரகமான இவ்வவதாரரஹஸ்யத்தை வெளியிட்டு லோகத்தை யுஜ்ஜீவிப்பிப்பதற்காக தன் கருணையாலே ப்ரவ்ருத்தனாய், 1 'இதிஹாஸ புராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத் | பிபேத்யல்பஶ்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி ||' என்கிற ஶாஸ்த்ரார்த்த

---

ஶமம் - ஶாந்தியை, நயதி - அடையும்படி செய்கிருனே. முமுக்ஷுவுக்கு - மோக்ஷத்தில் ஆசையுடையவனுக்கு, பரோபகாரகமான - மிகவும் உபகாரம் செய்கிற. இவ்வவதாரரஹஸ்யத்தை - இந்த ஸ்ரீராமாவதார வ்ருத்தாந்தத்தினுடைய உட்கருத்தினுல் ஏற்பட்ட அர்த்தத்தை. இத்தால் ஸ்ரீமத்ராமாயணம் முமுக்ஷுக்களினுல் அவஶ்யம் அறியத்தக்கது என்பது நிரூபிக்கப் பட்டதாகிறது. ப்ரவ்ருத்தனாய் - ஆரம்பிவித்தவராய். மேல் வேதாந்தத்தின் அர்த்தங்களை அறிவதில் ஆசையுடையவர்களினுல் ஸ்ரீமத் ராமாயணம் அவஶ்யமாய் அறியப்படவேண்டியது என்று நிரூபித்தருளுகிருர்—'இதிஹாஸ' என்ருரம்பித்து. இதிஹாஸபுராணாப்யாம் - இதிஹாஸம் புராணம் இவைகளினுல், வேதம் - வேதாந்தத்தை, ஸமுபப்ரும்ஹயேத் - நன்ருக அறியவேண்டும், வேத: - வேதம், அல்பஶ்ருதாத் - கொஞ்சம் தெரிந்தவனிடத்தில் இருந்து, அயம் - இவன், மாம் - என்னை, ப்ரதரிஷ்யதி - மோசம் செய்யப்போகிருன் என்று, பிபேதி - பயப்படுகிறது. இவ்விடத்தில் புராண என்னும் பதம் குறைந்த எழுத்தாயிருப்பதினுல் முன்னுல் ப்ரயோகிக்கப்பட வேண்டியதாயிருந்தபோதிலும் அதிக எழுத்தையுடைய இதிஹாஸ என்னும் பதத்தை முன்னுல் ப்ரயோகித்திருப்பது 'அப்யர்ஹிதம் பூர்வம்' (சிறந்த வஸ்துவை முதலில் சொல்லவேண்டும) என்கிற ந்யாயத்தை அனுஸரித்து உபப்ரும்மணங்களுக்குள் இதிஹாஸம் சிறந்தது என்பதைத் தெரிவிப்பதற்காக. வேதம் என்னும் பதம் இங்கு வேதாந்தத்தைக் குறிக்கிறது. வேதங்களின் முதல் பாகமான கர்மகாண்டங்களின் உபப்ரும்மணம்

---

1 பார - ஆதி - 1 - 273

ஹைத **ஸம்ஸயி**த்துக்கொண்டு **வேதோபப்ருஹ்மணஸாபே க்ஷ**ரான **ஸ்வல்பஸ்ருதர்** பக்கல் இரக்கத்தாலும், அவர்களைப் பற்ற வேதங்களுக்குண்டான **பயத்தை ஸமிப்பி**க்கைக்காகவும், 1 ' **ஸம்ஸ்க்ருதம் வேதைஸ்ஸம்ஹிதம்** ' என்கிறபடியே நாலு வேதங்களும் ஒரு தட்டிலும் தானொரு தட்டிலுமாக நிற்கிற **ஸ்ரீராமாயணமா**கிற **ப்ரபந்த**த்தையருளிச் செய்து, 2 ' **விஜயார்த்தம்**

---

ஸ்ம்ருதிகளினால் செய்யப்படுகிறபடியினால் அவைகள் வித்யாஸ்தானங்களில் தர்மஸாஸ்திரம் என்று தனித்து எண்ணப்பட்டது. உபநிஷத்பாகத்திற்கு உபப்ரும்மணங்களான இதிஹாஸ புராணங்கள் புராணம் என்று தனி வித்யாஸ்தானமாக படிக்கப்பட்டது, ஸ்ம்ருதிகளும் புராணங்களும் பூர்வ காண்டங்களையே உபப்ரும்மணம் செய்வது என்று கொள்ளில் இரண்டையும் தனித்து வித்யாஸ்தானமாகப் படித்திருப்பது ஸங்கதமாகாது என்றறியத்தக்கது. இவ்வர்த்தம் ஸ்ரீ ஸ்ருதப்ரகாஸிகை, ஸ்ரீந்யாய பரிசுத்தி முதலிய க்ரந்தங்களில் விஸ்தாரமாக ப்ரதிபாதிக்கப்பட்டிருக்கிறது, அங்கு கண்டு கொள்வது. ஆகையினால் சிலர் ஸ்ரீமத்ராமாயணத்தினால் ஸ்ம்ருதிகளில் சொல்லப்படும் ஸாமாந்ய தர்மங்களே விவரிக்கப்படுகிறது என்றும், பரதத்வ விஷயத்தில் இதர புராணங்களுக்கு விருத்தமாயிருப்பதினால் அநாதரணீயம் என்றும் சொல்லுவதெல்லாம் அனுசிதம் என்பது ஸூசிதம். **ஸம்ஸயி**த்துக்கொண்டு - தன் மனதில் எண்ணிக்கொண்டு, **வேதோபப்ருஹ்மணஸாபேக்ஷரான** - வேதத்தில் சொல்லுகிற அர்த்தங்களை விஸதமாக அறியவேண்டும் என்கிற ஆசையையுடையவர்களான, **ஸ்வல்பஸ்ருதர்** - கொஞ்சம் அறிந்தவர், அதாவது சில ஸாஸ்திரங்களை மட்டும் அறிந்தவர் என்றபடி. **பயத்தை** - மோசம் செய்யப்போகிறார்களே என்கிற பயத்தை. **ஸம்ஸ்க்ருதம்** - பரிசுத்தமாயும், **வேதைஸ்** - வேதங்களுடன், **ஸம்ஹிதம்** - ஒப்பாகச் செய்யப்பட்ட. 'நாலு' இத்யாதி '**வேதை:**' என்கிற பதத்தில் இருக்கும் (பன்மையினால்) பஹுவசனத்தினால் ஏற்பட்ட தாத்பர்யம். **ஸ்ருத:** - ஜ்ஞா

---

1 ராமா - பால - 1 - 94    2 ராமா - பால - 4 - 3

கோந்வேதத் ப்ரயுஞ்ஜீயாதிதி ப்ரபு:' என்கிறபடியே யாரைக்கொண்டு இப்ரபந்தத்தை ப்ரவர்த்திப்பிக்கக் கடவோமென்று சிந்தித்த ஸமயத்திலே குமாரர்கள் வந்து பாதோபஸங்க்ரஹணம்பண்ண, 1 'தௌ து மேதாவிநௌ த்ருஷ்ட்வா வேதேஷு பரிநிஷ்டிதௌ । வேதோபப்ரும்ஹணார்தாய தாவக்ராஹயத ப்ரபு: ॥' என்கிறபடியே உசிதாதிகாரித்வத்தாலே உபப்ரும்ஹணரூபமான இப்ரபந்தத்தை ப்ரவர்த்திப்பித்தான்.

இதி ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு
ஸ்ரீ அ ப ய ப்ர தா ந ஸா ரே
॥ ப்ரபந்தாவதார: ப்ரதமோதிகார: ॥

॥ ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேசிகாய நம: ॥

சீயார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.



னம் ஶக்தி முதலியவைகளையுடைய வால்மீகி மஹரிஷி, ஏதத் - இந்த ப்ரபந்தத்தை, கோ நு - எவன், ப்ரயுஞ்ஜீயாத் - ப்ரயோகம் செய்வான், இதி - என்று, சிந்தயாமாஸ - சிந்தித்துக் கொண்டிருந்தார், அதாவது தான் ஶக்தியை யுடையவராயிருந்த போதிலும் இப்ரபந்தத்தை நாடகப்ரயோகம் செய்வதைப்போலே பாவ ராக தாளங்களுடன் ப்ரயோகம் செய்யக்கூடியவர் யார் என்று யோசித்தார் என்று தாத்பர்யம். பாதோபஸங்க்ரஹணம் பண்ண - திருவடிகளைப் பிடித்துக்கொள்ள. மேதாவிநௌ - புத்திமான்களாயும், வேதேஷு - வேதங்களில், பன்மையினால் ராகத்திற்கு ப்ரதானமான ஸாமவேதத்திற்கு உபவேதமான காந்தர்வ

1 ராமா - பால - 4 - 6

வேதமும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது, **ஸுநிஷ்ணாதௌ** - மிகவும் ஸாமர்த்திய முடையவர்களாயிருக்கிற, **தௌ து** - அந்தக் குசலவர்களை, '**து**' என்பது மற்றவர்களைவிட இவர்களுடைய வைலக்ஷண்யத்தைக் குறிக்கிறது, **த்ருஷ்ட்வா** - பார்த்து, **வேதோபப்ரும்ஹணார்த்தாய** - வேதத்திற்கு உபப்ரும்மணமான ஸ்ரீமத் ராமாயணத்தைக் கற்றுக்கொடுப்பதற்காக, **ப்ரபு:** - ப்ரபுவாகிய வால்மீகி ரிஷி, **தௌ** - அவர்களை, **அக்ராஹயத** - சிஷ்யர்களாக அங்கீகரித்தார். **உசிதாதிகாரிஸத்பாவ**த்தாலே - அதற்குத் தகுந்த அதிகாரிகளைக்கொண்டு அவர்கள் முகமாக.

இப்படி திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
பண்டித பூஷணம் மஹாமஹோபாத்யாய
**ஸ்ரீ. உ. வே. நரஸிம்மாசார்யர் ஸ்வாமியின்**

## ஸ்ரீ அபயப்ரதானஸார வ்யாக்யானத்தில்

ப்ரபந்தாவதாரம் என்னும் முதல் அதிகாரம் முற்றிற்று.



ஸ்ரீ:

॥ ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம: ॥

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

## ॥ பரதத்வோபப்ரும்ஹணாதிகாரோ த்விதீய: ॥

**இப்படி இதிஹாஸத்தில் பண்ணுகிற பஹுவிதங்களான வேதோபப்ரும்ஹணங்களில் ப்ரதானமான உபப்ரும்ஹணம்**

---

॥ ஸ்ரீ: ॥

॥ ஶ்ரீமதே ஶ்ரீநிவாஸராமாநுஜ மஹாதேஶிகாய நம: ॥

## பரதத்வோப ப்ரும்மாணுதிகாரம்

இப்படிப் பொதுவாக உபநிஷத்துக்களில் சொல்லிய அர்த்தத்தை உபப்ரும்மணம் செய்கிறது என்றும், உபப்ரும்மணங்களுக்கு வேண்டிய லக்ஷணங்கள் பொருந்தியிருக்கிறது என்றும், க்ரந்த கர்த்தாவாகிய வால்மீகிரிஷி மிகவும் ஆப்தர் என்றும், ஶரணுகதி தர்மத்தை உபப்ரும்மணம் செய்யவே ப்ரவர்த்தித்தது என்றும், அருளிச்செய்து, இதில் வேதோப ப்ரும்மணம் பண்ணப்படும் விஷயம் பரதத்வத்தைப்பற்றியும் பரமஹிதத்தைப் பற்றியும் என்றும், அப்படிச் செய்யப்படும் ப்ரகாரத்தையும், இரண்டு அதிகாரங்களில் நிரூபிக்கத் திருவுள்ளம்பற்றி அதில் ப்ரதானமான பரதத்வ விஷயமாகச் செய்யப்படும் ப்ரகாரத்தை நிரூபித்தருளியரூர்—'இப்படி' என்ருரம்பித்து. இப்படி - கீழ் நிரூபித்த ப்ரகாரமாக, அதாவது தான் ஒரு ஆசார்யனிடமிருந்து உபதேசிக்கப்பெற்று, தன்னுடைய தபோ மஹிமையினுல் உள்ளபடி அறிந்த அர்த்தத்தை ஸகலரும் அறிந்து உஜ்ஜீவிக்க வேண்டும் என்று ப்ரபந்தரூபமாக அருளிச்செய்த. பஹுவிதங்களான - அனேக விதங்களான, அதாவது பித்ருவசன பரிபாலனம் ஸத்ய வசன பரிபாலனம் முதலிய ஸாமான்ய தர்மங்களும் பகவத் கைங்கர்யம் பாகவத கைங்கர்யம் முதலிய விஶேஷ தர்மங்களும் உப

**ஶ்வேதாஶ்வதராதி**களில் சொல்லுகிற **ஸர்வஶரண்ய ஸாத கவிஷய**மாயும் **ஸர்வாதிகார**மான **ஶரணாகதிரூப ஸாதநஹிதவிஷய**மாயும் இரண்டு வகையாயிருக்கும்.

---

ப்ரும்மணம் செய்யப்படுகிறபடியினால் என்றபடி. **ஆத்யாமமான**- முக்யமான. 'ஶ்ருண்வந்து ஸர்வவர்ணாநாம் யதாவச்ச நாவபிவர்ஶ: | சுதுர்வ்யூஹாவாணாம் ச யத்நம் நோ வக்த்ரு ஶஹர்ஷி ||' என்றாரம்பித்து 'யத்ரஸ்ய பரம் குஹ்யம் ஶ்ரேஷ்டம் ஸர்வத்ரகவாந்' என்று உபஸம்ஹாரம் செய்திருப்பதினாலும் (முடித்திருப்பதினாலும்), 'கோயம்ஸர்வஸ்வயத்ராணாம்' என்று கேட்க, 'மஹர்ஷே ஸர்வயத்ராணாம்' என்று பதில் சொல்லியிருப்பதினாலும் தர்மத்தை நிரூபிப்பதற்கு மாத்திரம் ப்ரவர்த்தித்திருக்கும் மற்றைய க்ரந்தங்கள் போலன்றிக்கே 'கோந்வஸ்மிந் ஸாம்ப்ரதம் லோகே குணவாந்' என்று கேட்டதற்கு, 'தைர்யுக்த: ஶ்ரூயதாம் நர: | இக்ஷ்வாகுவம்ஶப்ரபவோ ராமோ நாம ஜநை: ஶ்ருத: ||' என்று பதில் சொல்லியிருப்பதினாலும், அதையே மேல்விஸ்தாரமாக நிரூபித்திருப்பதினாலும் ஸர்வஶரண்யனாய் ஸித்தோபாயனாயிருக்கும் பரதத்வத்தைப் பற்றி விஸ்தாரமாக நிரூபிப்பதற்கே ப்ரவர்த்தித்தது இப்பிரபந்தம். ஆகையால் இப்ப்ரபந்தத்தில் ப்ரதிபாதிக்கப்படும் விஷயங்களில் ஶரணாகதி விஷயமான உபப்ரும்மணமே ப்ரதானமானது என்பதும், அதில் ஶரண்யனை நிரூபிக்கும்பொழுது ஶரணாகதியும் நிரூபிக்கப்படுகிறது என்பதும் தெரிவிக்கப்படுகிறது. **ஶ்வேதாஶ்வதராதி** - இங்கு ஆதிபதம் தைத்திரீயம், கடவல்லி இவைகளை குறிக்கிறது. **ஸர்வஶரண்ய** - எல்லோராலும் ஶரணமாக அடையத் தகுந்தவனான. இங்கு 'எல்லோருக்கும் ஶரணமாயும் ஸுஹ்ருத்தாயும் இருக்கிறான்' என்றும், 'எவன் ப்ரும்மாவை ஆதியில் ஸ்ருஷ்டித்தானோ, எவன் அவருக்கு வேதங்களை உபதேஶம் செய்தானோ அப்படிப்பட்ட ஸர்வஜ்ஞனான தேவனை மோக்ஷத்தில் ஆசையுடையவனான நான் ஶரணமாக அடைகிறேன்' என்றும் அர்த்தமுள்ள வாக்யங்கள் கருத்தில் கொள்ளப்பட்டன. '**ஸாதக**' என்பதற்கு எது ஜகத்காரணமானதோ அதுவே எல்லோராலும் ஆஶ்ரயிக்கத்

அதில் ஸர்வஶரண்யமான பரதத்வத்தை நிஷ்கர்ஷிக்குமிடத்தில் ஸர்வேஶ்வரனைப்பற்ற ஸமரென்றும், ஏகரென்றும், அதிகரென்றும் ஶங்கிதராயிருப்பார் இருவருண்டு. அவர்களாரென்னில்:—ஸர்வேஶ்வரனுடைய மகனும் பேரனும். அவர்களில் பேரனான ருத்ரனில் காட்டில் ஸர்வேஶ்வரனது அதிகனென்னுமிடத்தை 1 'ஜ்ரும்பிதம் தத்தனுர்த்ருஷ்ட்வா ஶைவம்

---

தகுந்ததாகும் என்று திருவுள்ளம். ஸர்வாதிகாரமான - ஜாதி முதலிய வ்யத்யாஸம் இல்லாமல் ஆகிஞ்சனர்களாயிருக்கும் எல்லோராலும் அனுஷ்டிக்கக் கூடியதான. ஸாரஹிதம் - ஹிதங்கள் எல்லாவற்றிலும் மேற்பட்டதான ஹிதம், அதாவது ஶரணாகதி என்றபடி.

இப்படி ப்ரதிஜ்ஞை செய்த பாகத்தில் பரதத்வத்தைப் பற்றி உபப்ரும்மணம் செய்திருக்கும் ப்ரகாரத்தை விஸ்தாரமாக நிரூபித்தருளுகிறார்—'அதில்' என்றாரம்பித்து. அதில் - இப்படி ஸ்ரீமத் ராமாயணத்தில் ப்ரதானமாக உபப்ரும்மணம் செய்யப்படும் இரண்டு அர்த்தங்களுக்குள். ஸமர் - (பகவானோடு) ஒருவித வ்யத்யாஸமும் இல்லாமல் ஸத்ருஶராயிருப்பவர். ஏகர் - (பகவானோடு) ஒன்றாயிருப்பவர், அதாவது மும்மூர்த்திகளும் ஒருவர் என்றபடி. அதிகர் - பகவானைவிட மேல்பட்டவர். ஶங்கிதர் - ஜனங்களினால் ஸந்தேகிக்கப்பட்டவர்கள். மகனும் - குமாரனான ப்ரும்மாவும், பேரனும் - ப்ரும்மாவுக்குப் பிள்ளையான ருத்திரனும். இத்தால் பகவானால் உண்டாக்கப்பட்ட அவர்கள் அவனுடன் ஸமராகவும், ஏகராகவும், அதிகராகவும் இருக்க ப்ரஸக்தியில்லை என்பது தெரிவிக்கப்படுகிறது. அன்றிக்கே 'பாத்ராதிஷு ஹி ஸாம்ராஜ்யம்' என்கிற லோகநீதியை அனுஸரித்து இப்படிப் பரதத்வமாக ஶங்கிக்கும்படியான மகனையும் பேரனையும் உடையவன் என்கிற மேன்மையும் ஸர்வேஶ்வரனுக்கே உள்ளது என்று சாடுவாகவுமாம். தத் - அந்த, ஶைவம் - ருத்திரனுடையதான, தநு: - தனுஸ்ஸை, விஷ்ணுபராக்ரமை: - பகவா

---

1 ராமா - பால - 75 - 20

**விஷ்ணுர்வராகஸ்ய செ: | அதிகம் மேநிரே விஷ்ணும் தே வாஸ்ஸர்ஷிகணாஸ்ததா ||** ' என்று ஸ்ரீவால்மீகி பகவான் வாக்யத் தாலே வெளியிட்டான். **ராவணவதாநந்தரம்** தேவர்கள் வந்து பெருமாளை ஸ்தோத்ரம் பண்ணுகிறபோது ப்ரஹ்மாதி ஸர்வ தேவர்களுடைய 1 '**கர்த்தா ஸர்வஸ்ய லோகஸ்ய ச்ரேஷ்டோ ஜ்ஞாநவதாம் விபு: | உபேக்ஷஸே கதம்**

---

னுடைய பராக்ரமங்களினால், இங்கு பராக்ரமங்களினால் என்று பஹு வசனமாகச் சொல்லியிருப்பது பஹுமானத்திற்காக, பகவானுடைய ஹுங்காரத்தினாலிறே அந்த ருத்திரனுடைய தனுஸ்ஸு மூச்சுவிட் டது என்று கீழ் நிரூபிக்கப்பட்டிருப்பதினால் என்றறியத் தக்கது, அன்றிக்கே பரிஹாஸத்திற்காக விபரீத லக்ஷணையாய் விஷ்ணுவான வர் பராக்ரமங்கள் ஒன்றும் காட்டாமல் கேவலம் ஒரு ஹுங்காரம் செய்த மாத்திரத்தினாலேயே அந்ததனுஸ்ஸு பக்னமாய் விட்டது என்றபடியாகவுமாம், **ஜ்ரும்பிதம்** - பிளந்துவிட்டதாக, **த்ருஷ்ட்வா** - பார்த்து, **ததா** - அப்பொழுதே, **ஸர்ஷிகணா:** - ரிஷிகளின் கூட்டங்களுடன் சேர்ந்த, **தேவா:** - தேவதைகள், **விஷ்ணும்** - விஷ்ணுவை (பகவானை), **அதிகம்** - மேல்பட்டவனாக, **மேநிரே** - எண்ணினார்கள். இங்கு '**ததா**' என்பதினால் ப்ரத் யக்ஷமாகப் பார்த்தபிறகு யோசிக்கக் காரணமே இல்லை என்பதும், '**தேவா:**' இத்யாதி பஹுவசனத்தினால் அதில் இதற்கு எதிர் நடையான அபிப்பிராயமுடையவர் ஒருவரும் இல்லை, எல்லோ ரும் ஏகமதிகளாயிருந்தார்கள் என்பதும் ஏற்படுகிறது **ராவண வதாநந்தரம்** - ராவணனைக் கொன்றபிறகு **ஸர்வஸ்ய** - எல்லா, **லோகஸ்ய** - லோகத்திற்கும், **கர்த்தா** - ஸ்ருஷ்டியைச் செய்பவ னும், **ஜ்ஞாநவதாம்** - ஜ்ஞானத்தை உடையவர்களுக்குள், **ச்ரேஷ்ட:** - சிறந்தவனாகவும், **விபு:** - சக்தியையுடையவனாயும் இருக்கிற நீர், **ஹவ்யவாஹநே** - நெருப்பில், **பதந்தீம்** - விழு

---

1 ராமா · யுத் -120 - 5,6,9

ஸீதாம் பதந்தீம் ஹவ்யவாஹநே | கதம் தேவகண ச்ரேஷ்டம் ஆத்மாநம் நாவபுத்யஸே | உபேக்ஷஸே ச வைதேஹீம் மாநுஷ: ப்ராக்ருதோ யதா ||' என்கிற வாக்யத்தாலே பெருமாளுடைய ஸர்வஸ்மாத் பரத்வத்தை ஸ்தாபித்தான் ருத்ரன். தேவர்கள் தவிர ப்ரஹ்மா தனித்து ஸ்தோத்ரம் பண்ணுகிறவிடத்திலும் எதிரி கையாலே விடுதீட்டான கணக்கிலே 1 'அக்ஷரம் ப்ரஹ்ம ஸத்யம் த்வம்' என்று ஸர்வவிலக்ஷணமான பரப்ரஹ்மம் பெருமாளென்னு மிடத்தையும், 2 'த்வம் த்ரயாணாம் ஹி லோகாநாம் ஆதிகர்த்தா ஸ்வயம் ப்ரபு:' என்று ப்ரஹ்மலக்ஷணமான ஜகத்காரண

---

கிற, ஸீதாம் - ஸீதையை, கதம் - எப்படி, உபேக்ஷஸே - அலக்ஷ்யம் செய்கிறீர், கதம் - என், தேவகணச்ரேஷ்டம் - தேவதைகளினுடைய ஸமூஹங்களுக்குள் சிறந்தவரான, ஆத்மாநம் - உம்மை, நாவபுத்யஸே - தெரிந்துகொள்ளவில்லை, ப்ராக்ருத: - ஸாதாரணமான, மாநுஷ: யதா - மனுஷ்யனைப்போல, வைதேஹீம் - ஸீதையை, உபேக்ஷஸே - அலக்ஷ்யம் செய்கிறீர். ஸர்வஸ்மாத் பரத்வத்தை - எல்லாரையும் விட மேல்பட்டவன் என்பதை. விடுதீட்டான கணக்கிலே - (எழுதிக் கொடுக்கப்பட்ட) விடுதலைச் சீட்டைப்போலே, அதாவது யாரைப் பரதத்வம் என்று ஸந்தேஹிக்கிறார்களோ அவர்களே பகவானே பரதத்வம் என்று சொல்லியிருக்கிறார்கள் என்றபடி. த்வம் - நீர், அக்ஷரம் - நாசம் இல்லாததும், ஸத்யம் - விகாரங்கள் இல்லாததுமான, ப்ரஹ்ம - ப்ரும்மம். ஸர்வவிலக்ஷணமான - எல்லா வஸ்துக்களையும் விட மேற்பட்ட. த்வம் - நீர், த்ரயாணாம் - மூன்று, லோகாநாம் - லோகங்களுக்கும் அதாவது க்ருதகம் (அடிக்கடி அழிவை அடைகிற இந்த லோகங்கள்), அக்ருதகம் (ஒருநாளும் அழிவில்லாத நித்ய விபூதி), க்ருதகாக்ருதகம் (அடிக்கடி அழியாமலிருக்கும் ப்ரும்ம

---

1 ராமா - யுத் - 120 - 14    2 ராமா - யுத் - 120 - 7

ஸ்வத்தையும், 1 'ஜகத்ஸர்வம் ஶரீரம் தே' என்று ஸர்வ ஶரீரித்வத்தையும், 2 'அஹம் தே ஹ்ருதயம் ராம ஜிஹ்வா தேவீ ஸரஸ்வதீ' இத்யாதிகளாலே ஶ்ருதப்ரயோகத்தில் ஔரஸமான ஹ்ருதயஶப்தத்தாலே ப்ரஹ்மாவினுடைய கார்யத்வத்தையும், மற்றுமுள்ள தேவதைகளெல்லாம் விஶிஷ்டைகதேஶமானபடியையும், 3 'ஶரண்யம் ஶரணம் ச த்வாமாஹு: திவ்யா மஹர்ஷய:' என்று ஸர்வஶரண்ய

---

லோகம் முதலியது), ஆதிகர்த்தா - முதல் முதலில் ஸ்ருஷ்டி செய்பவன், ஸ்வயம்ப்ரபு: - தானே யஜமானன், தன்னை ஸ்ருஷ்டிப்பவர் ஒருவருமில்லை என்றபடி. ஶாரீரக ஸூத்திரத்தில் முதலில் பருூம்மத்தை விசாரிக்கவேண்டும் என்று உபக்ரமித்து, அப்படிப்பட்ட ப்ரும்மம் லோகங்களுக்கெல்லாம் ஸ்ருஷ்டி கர்த்தாவாயிருக்கும் என்று ப்ரும்மத்திற்கு லக்ஷணம் நிரூபிக்கப்பட்டிருக்கிறதும் இந்தப் பகவானைப் பற்றியதே என்றபடி. ஸர்வம் - எல்லா, ஜகத் - லோகமும், தே - உமக்கு, ஶரீரம். ஸர்வஶரீரித்வத்தையும் - எல்லாவற்றையும் தனக்கு ஶரீரமாக உடையவனாய் இருக்கும் தன்மையையும். ராம - ஓ! ராமனே, அஹம் - நான், தே - உமக்கு, ஹ்ருதயம், தேவீ - தேவியாகிய, ஸரஸ்வதீ - ஸரஸ்வதி, ஜிஹ்வா - நாக்கு. ஶ்ருதப்ரயோகத்தில் ஶ்ருதியில் ப்ரயோகித்திருப்பதனால், 'ஔரஸ' இத்யாதி - ஹ்ருதயத்திலிருந்து பிள்ளை பிறக்கிறான் என்று ஶ்ருதியில் சொல்லப்பட்டிருப்பதினால் ஹ்ருதயம் என்பது புத்திரனைச் சொல்லுகிறது என்றபடி. விஶிஷ்டைகதேஶமானபடியையும் - பகவானால் நியமிக்கப்படும் வஸ்துக்களுக்குள் ஒரு பாகமாக இருக்கும் ப்ரகாரத்தையும். இத்தால் 'தேவா காத்ரேஷு ரோமாணி' (எல்லாத் தேவதைகளும் உம்முடைய ஶரீரத்தில் கேஶத்தைப்போல் இருக்கிறார்கள்) என்கிற வசனம் ஸூசிதமாகிறது. திவ்யா: - சிறந்தவர்களான, மஹர்ஷய: - ரிஷிகள், த்வாம் - உம்மை, ஶரண்யம் - எல்லோராலும் ஶரண

---

1 ராமா - யுத் - 120 - 25 2 ராமா - யுத் - 120-23 3 ராமா-யுத்-120-17

த்வத்தையும் பேசினன். யாவனொருவன் ப்ரும்மாவை முற்பட ஸ்ருஷ்டிக்கிறனென்று ஶ்வேதாஶ்வதரோபநிஷத்திலே ஶ்ருதமான அர்த்தத்தை உத்தரஸ்ரீராமாயணத்திலே ப்ரஹ்மா தன்னுடைய வாக்யத்தாலே பேசினன். எங்ஙனேயென்னில்:— 1 'ஸமயஸ்தே மஹாபாஹோ ஸ்வாந் லோகாந் பரிரக்ஷிதும் | ஸம்க்ஷிப்ய ச புரா லோகாந் மாயயா ஸ்வயமேவ ஹி || மஹார்ணவே ஶயாநோऽப்ஸு மாம் த்வம் பூர்வமஜீஜந: |' என்று துடங்கி, 'பத்மே திவ்யேऽர்கஸம்காஶே நாப்யாமுத்பாத்ய மாமபி | ப்ராஜாபத்யம் த்வயா கர்ம ஸர்வம் மயி நிவேஶிதம் || ஸோஹம் ஸந்யஸ்தபாரோ

---

மாக அடையத் தகுந்தவனுயும், ஶரணம் - ரக்ஷகனுகவும், ஶ்ருதா: - சொல்லுகிறுர்கள். ஶ்ருதமான - ஓதப்படுகிற. மஹாபாஹோ - பாஹு பலமுடைய ஸ்ரீராமனே, தே - உமக்கு, ஸ்வாந் - உம்முடையவைகளான, லோகாந் - லோகங்களை, பரிரக்ஷிதும் - காப்பாற்றுவதற்கு, ஸமய: - காலம் (இது), புரா - முன்னல், லோகாந் - லோகங்களை, மாயயா - (உம்முடைய) ஸங்கல்பத்தினுல், ஸ்வயமேவஹி - நீர்தானே, ஸம்க்ஷிப்ய - சுருக்கிக்கொண்டு, (அதாவது ஸூக்ஷ்மதசையை அடையும்படி செய்து), மஹார்ணவே - ப்ரளய ஸமுத்திரத்தில், அப்ஸு - ஜலத்தில், ஶயாந: - படுத்துக்கொண்டவராய், த்வம் - நீர், மாம் - என்னை, பூர்வம் - முதலில், அஜீஜந: - உண்டாக்கினீர், நாப்யாம் நாபியில், திவ்யே - திவ்யமான, அர்கஸம்காஶே - ஸூர்யன் போல் ப்ரகாசிக்கிற, பத்மே - தாமரைப்புஷ்பத்தில், மாம் - என்னை, உத்பாத்ய - உத்பத்தி செய்து, த்வயா - உம்மால், மயி - என்னிடத்தில், ப்ராஜாபத்யம் - ப்ரஜாபதியினுடையதாகிய, ஸர்வம் - எல்லா, கர்ம - கார்யங்களும், நிவேஶிதம் - ஒப்புக்கொடுக்கப்பட்டது, ஸோஹம் - அப்படிப்பட்ட நான், ஸந்யஸ்தபார: - உம்

---

1 ராமா - உத் - 104 - 3,4,7—11.

ஹி த்வாமுபாஸே ஜகத்பதிம் | ரக்ஷாம் விதத்ஸ்வ பூதே-
ஷு மம தேஜஸ்கரோ பவான் || ததஸ்த்வமபி துர்த்தர்ஷ:
தஸ்மாத் பாவாத் ஸநாதநாத் | ரக்ஷார்த்தம் ஸர்வபூ-
தானாம் விஷ்ணுத்வமுபஜக்மிவான் || அதித்யாம் வீர்யவா-
ன் புத்ரோ ப்ராத்ரூணாம் ஹர்ஷவர்த்தன: | ஸமுத்பன்னே-
ஷு க்ருத்யேஷு லோகஸ்யார்த்தாய கல்பஸே || ஸ த்வம்
வித்ராஸ்யமானாஸு ப்ரஜாஸு ஜகதோऽத்ய வை |
ராவணஸ்ய வதாகாங்க்ஷீ மானுஷேஷு மனோऽதத: ||'

---

மால் வைக்கப்பட்ட சுமையை உடையவனாய், **ஜகத்பதிம்** - லோகங்களுக்குப் பதியான, **த்வாம்** - உம்மை, **உபாஸே** - த்யானம் செய்கிறேன், **பவான்** - நீர், **மம** - எனக்கு, **தேஜஸ்கர:** - தேஜஸ்ஸை உண்டாக்கினவராய்க் கொண்டு, **பூதேஷு** - ப்ராணிகளிடங்களில், **ரக்ஷாம்** - ரக்ஷிப்பதை, **விதத்ஸ்வ** - செய்யும், **தத:** - பிறகு, **துர்த்தர்ஷ:** - ஒருவராலும் ஜயிக்கமுடியாத, **த்வமபி** - நீரும், **தஸ்மாத்** - அந்த, **ஸநாதநாத்** - அநாதியான, **பாவாத்** - அவதாரத்தில் இருந்து, **ஸர்வபூதானாம்** - எல்லா ப்ராணிகளையும், **ரக்ஷார்த்தம்** - ரக்ஷிப்பதற்காக, **விஷ்ணுத்வம்** - விஷ்ணுவாயிருக்கையை **உபஜக்மிவான்** - அடைந்தீர். **அதித்யா:** - அதிதிக்கு, **வீர்யவான்** - பராக்ரமத்தை உடைய, **புத்ர:** - பிள்ளையாயிருந்து, **ப்ராத்ரூணாம்** - ஸஹோதரர்களான தேவதைகளுக்கு, **ஹர்ஷவர்த்தன:** - ஸந்தோஷத்தை வ்ருத்தி செய்பவராக ஆனீர், **லோகஸ்ய** - லோகத்திற்கு, **க்ருத்யேஷு** - கார்யங்கள், **ஸமுத்பன்னேஷு** - வந்திருக்கும்பொழுது, **அர்த்தாய** - (அந்த) ப்ரயோஜனத்திற்காக, **கல்பஸே** - (அவதரித்தவர்) ஆகிறீர், **ஸ த்வம்** - அப்படிப்பட்ட நீர், **அத்ய** - இப்பொழுது, **ஜகத:** - லோகத்தினுடைய, **ப்ரஜாஸு** - ஜனங்கள், **வித்ராஸ்யமானாஸு** - பயத்தை உண்டாக்கப்பட்டிருக்கும்பொழுது, **ராவணஸ்ய** - ராவணனுடைய, **வதாகாங்க்ஷீ** - வதத்தை விரும்பினவராய்க்கொண்டு, **மானுஷே**

என்று ஸர்வேச்வரன் ஸர்வகாரணமானபடியையும், தானவனுக்கு கார்யபூதனுமாய் பரதந்த்ரனுமாய் தத்ஸங்கல்பகல்பிதஸ்தாநனுமாயிருந்தபடியையும், தங்கள் நடுவும் ராஜவம்சத்தில் நடுவும் ஸர்வேச்வரனு மத்ஸ்யாதிகளுடைய மத்யத்திற் போலே ஸ்வேச்சையாலே அவதரிக்கிறனேன்னுமிடத்தையும் ப்ரஹ்மா விண்ணப்பம்செய்தான்.

தன்னுடைச்சோதிக்கு எழுந்தருளுகிறபோதும் 1 'ஆகச்ச விஷ்ணோ பத்ரம் தே திஷ்ட்யா ப்ராப்தோஸி மாநத | ப்ராத்ருபி: ஸஹ தேவாபை: ப்ரவிசஸ்வ ஸ்வகாம் தநும் ||

---

ஷு - மனுஷ்ய லோகங்களில், மந: - மனதை, க்ருதா: - செய்தீர், அதாவது அவதரிக்கும்படி ஸங்கல்பித்தீர். ஸர்வகாரண மான - தனக்கு ஒரு காரணம் இல்லாமல் எல்லாவற்றிற்கும் தானே காரணமான. கார்யபூதன் - உண்டாக்கப்பட்டவன். பரதந்த்ரன் - அயலானுக்கு வசப்பட்டவன், தத்ஸங்கல்பகல்பிதஸ்தாநன் - அவனுடைய ஸங்கல்பத்தினுல் உண்டான தன்னுடைய ஸ்தானத்தை உடையவன். தங்கள் நடுவும் - ப்ரும்மா, ருத்திரன், இவர்கள் இருவர்நடுவிலும் ராஜ வம்சத்தில்-இக்ஷ்வாகு வம்சத்தில். 'மத்ஸ்ய' இத்யாதி - மத்ஸ்யம் கூர்மம்வராஹம் முதலியவைகளுக்குள் தானும் ஒருவன்போல அவதரித்ததுபோல. ஸ்வேச்சையாலே - தன்னுடைய ஸங்கல்பத்தினுலே.

தன்னுடைச் சோதிக்கு - தனக்கே அஸாதாரணமாய் தேஜோ ரூபமாய் அதாவது ஸ்வயம்ப்ரகாசமாய் இருக்கும் பரமபதத்திற்கு. விஷ்ணோ - ஓ! விஷ்ணுவே, ஆகச்ச - வாரும், தே - உமக்கு, பத்ரம் - மங்களம் உண்டாகவேண்டும், மாநத - எங்களுக்கு கௌரவத்தைக் கொடுக்கிறவரே, திஷ்ட்யா - எங்களுடைய பாக்யத்தினுல், ப்ராப்த: - இங்கு வந்தவராக, அஸி - ஆகிறீர், தேவா

---

1 ராமா உத் - 110 - 8,9,10

வைஷ்ணவீம் தாம் மஹாதேஜஸ்தத்வாகாஶம் ஸநாதநம் |
த்வம் ஹி லோககதிர் தேவ ந த்வாம் கேசந ஜாநதே ||
ருதே மாயாம் விஶாலாக்ஷீம் தவ பூர்வபரிக்ரஹாம் |
யாமிச்சஸி மஹாதேஜஸ்தாம் தநும் ப்ரவிஶ ஸ்வயம் ||'

என்று விண்ணப்பம் செய்தான். இப்படியால் ப்ரஹ்மாதிகளுக்கும் கூட ஶரண்யமாய், பரமகாரணமான பரதத்வத்தை ப்ரதிபாதிக்கிற வசநங்களுக்கு உபப்ருஹ்மணம் பண்ணினான்.

இதி ஸ்ரீகவிதார்க்கிகஸிம்ஹஸ்ய ஸர்வதந்த்ரஸ்வதந்த்ரஸ்ய
ஸ்ரீமத்வேங்கடநாதஸ்ய ஸ்ரீமத்வேதாந்தாசார்யஸ்ய க்ருதிஷு

ஸ்ரீ அ ப ய ப்ர தா ந ஸா ரே

|| பரதத்வோபப்ருஹ்மணாதிகாரோ த்விதீய: ||

|| ஸ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ||

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்.



---

தைவை: - தேவதைகள்போல் ப்ரகாசிக்கிற, ப்ராத்ருபிஸ்ஸஹ - தம்பிகளுடன், ஸ்வகாம் - உம்முடையதான, தாம் - அந்த, வைஷ்ணவீம் - விஷ்ணுவினுடையதாகிய, தநும் - ஶரீரத்தை, ப்ரவிஶ ஸ்வ - ப்ரவேசியும், மஹாதேஜ: - அதிக தேஜஸ்ஸையுடைய விஷ்ணுவே, ஸநாதநம் - அநாதியான, தத் - அப்படிப்பட்ட, ஆகாஶம் ச - பரமபதத்தையும் (ப்ரவேசியும்), தேவ - ஓ! தேவனே, த்வம் - நீர், லோககதிர் ஹி - லோகங்களுக்கெல்லாம்பதியல்லவா, த்வாம் - உம்மை, விஶாலாக்ஷீம் - விசாலமான கண்களையுடைய, தவ - உமக்கு, பூர்வபரிக்ரஹாம் - அநாதியாகப் பத்தினியாயிருக்கிற, மாயாம் ருதே - விசித்திரங்களான கார்யங்களைச் செய்யும் ஶக்தியையுடைய லக்ஷ்மியைத்தவிர, கேசந - (வேறு) எவ

ரும், **ந ஜாநதே** - தெரிந்துகொள்ளவில்லை, **உக்ரதேஜ:** - மிகுந்த தேஜஸ்ஸையுடைய ராமனே! **யாம்** - எந்த ஶரீரத்தை, **இச்சஸி** - விரும்புகிறீரோ, **தாம்** - அந்த, **தநும்** - ஶரீரத்தை, **ஸ்வயம்** - நீரே, **ஆவிஶ** - ப்ரவேசியும். இப்படியால் - இப்படிக் கீழ் நிரூபிக்கப்பட்டிருக்கும் ப்ரகாரத்தினால் **பரதத்வத்தை** - உயர்ந்த தத்வத்தை. **உபப்ரும்ஹணம்** பண்ணினான் - அர்த்தத்தை விஶதமாக நிரூபித்தான்.

இப்படி திருவஹீந்திரபுரம் சேட்லூர் வித்வான் பகவத்விஷயம்
பண்டித பூஷணம் மஹாமஹோபாத்யாய
**ஸ்ரீ. உ. வே. நரஸிம்மாசார்யர் ஸ்வாமியின்**
ஸ்ரீ அபயப்ரதானஸார வ்யாக்யானத்தில்
பரதத்வோபப்ரும்மணாதிகார வ்யாக்யானம் முற்றிற்று.

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



॥ ஶ்ரீ: ॥

॥ ஶ்ரீமதே நிகமாந்தமஹாதேஶிகாய நம: ॥

## ॥ ஶரணாகதிதாத்பர்யப்ரபஞ்சநாதிகார: த்ருதீய: ॥

இப்படி ஸர்வஶரண்யமான ஸாதகத்வத்தினுடைய வஶீகரணஸமர்த்தமாய், ஸர்வாதிகாரமாய், ஸாரஸஹிதமாயிருக்கிற ஶரணாகதியர்த்தத்திற்கு விதாயகங்களான வேதபாகங்களை இதிஹாஸத்தில் உபக்ரமாதிகளாலே உபப்ருஹ்மி

---

ஶ்ரீ:

॥ ஶ்ரீமதே ஶ்ரீநிவாஸராமாநுஜமஹாதேஶிகாய நம: ॥

## ஶரணாகதி தாத்பர்ய ப்ரபஞ்சனாதிகாரம்

கீழ் 'ஸர்வஶரண்யமாய்' என்கிற இடத்தில் ஶரணாகதி தர்மம் உள்ளே இருக்கிறபடியினாலே அதை இந்த ஸ்ரீமத் ராமாயணம் உபப்ருப்பணம் செய்கிற ப்ரகாரத்தை விஸ்தாரமாக அருளிச்செய்ய ஆரம்பித்து அதை ப்ரதிஜ்ஞை செய்தருளுகிறார் — 'இப்படி' என்றாரம்பித்து. வஶீகரணஸமர்த்தமாய் - பகவானை வசப்படுத்துவதில் ஸாமர்த்தியமுடையதாய, ஸர்வாதிகாரமாய் - எல்லோராலும் அனுஷ்டிக்கக்கூடியதாய், ஸாரஸஹிதமாய் - ஸுலபமாகச் செய்யக்கூடியதாயும், ஒன்றினாலும் தடுக்கப்படாததும், தான் வேண்டின காலத்திலே பலத்தைக் கொடுக்கக்கூடியதாயும் இருப்பதினால் மோக்ஷத்திற்கு உபாயமாக ஶாஸ்திரங்களில் விதிக்கப்படுமவற்றில் மிகவும் உயர்ந்ததாய். விதாயகங்களான - விதியைச் செய்கிறவைகளான, அதாவது ஶரணாகதியை விதிக்கிற, 'வேதபாகங்களை' என்றது தைத்திரீயத்தில் 'ப்ரணவத்தினால் ஆத்மாவை ஸமர்ப்பிக்கவேண்டும்' என்றும், ஶ்வேதாஶ்வதரத்தில் 'மோக்ஷத்தில் ஆசையுடைய நான் ஶரணாகதி செய்கிறேன்' என்றும் 'ப்ரணவமே தனுஸ்ஸு, ஆத்மா பாணம், பகவானாகிற லக்ஷ்யத்தை மிகவும் ஜாக்கிரதையாக அடிக்கவேண்டும்' என்றும் சொல்லுகிற ஶ்ருதி வாக்யங்களை என்றபடி. உபக்ரமாதி

த்தான். எங்ஙனே யென்னில்:—**அவதாரப்ரஸங்கத்தில்** முற்பட **சக்ரவர்த்தியினுடைய யஜ்ஞத்திலே ஹவிர்பாகக்ரஹணார்த்தமாகத்** திரண்ட **தேவர்கள் ரக்ஷகாகாங்க்ஷிகளாய்** 1 'ஆவாரார் துணை' என்று நிற்கிறவளவிலே 2 '**ஏதஸ்மின்னந்தரே விஷ்ணுருபயாதோ மஹாத்யுதி: | சங்கசக்ரகதாபாணி: பீதவாஸா ஜகத்பதி: ||**' என்கிறபடியே **ஸர்வேச**

---

களாலே - ஆரப்பம் முதலியவைகளாலே, அதாவது ஒரு க்ரந்தத்தில் ப்ரதிபாதிக்கப்படும் விஷயம் எது என்று நிஸ்சயிக்க வேண்டுமானால் ஆரம்பம், முடிவு, நடுவில் அடிக்கடி சொல்லுவது, அந்த அர்த்தம் இதற்குமுன் வேறு க்ரந்தங்களில் ஏற்படாதிருத்தல், அதற்கு ப்ரயோஜனம், அதைப்பற்றிய ஸ்தோத்திரம், அதற்கு ஸாதகமான யுக்திகள் இவைகளைக் கொண்டு நிர்த்தாரணம் செய்யவேண்டும். இவைகள் கீழ்க்குறித்த சரணாகதியாகிற விஷயத்தில் ஸ்ரீமத் ராமாயணத்தில் இருக்கின்றன என்றறியத்தக்கது. **அவதாரப்ரஸங்கத்தில்** - ஸ்ரீராமனை அவதரித்த சரித்திரத்தை நிரூபிக்கும் இடத்திலே. முற்பட - க்ரந்தத்தின் உபக்ரமத்தில் (ஆரம்பத்தில்), அன்றிக்கே ஸ்ரீராமனை அவதரிப்பதற்கும் முன்னால் என்றாகவுமாம். **சக்ரவர்த்தியினுடைய** - தசரத சக்ரவர்த்தியினுடைய, '**ஹவிர்பாக**' இத்யாதி - யஜ்ஞத்தில் ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸுக்களில் தங்கள் தங்கள் பாகங்களை வாங்கிக்கொள்ளுவதற்காக, திரண்ட - கும்பலாகச்சேர்ந்த, **ரக்ஷகாகாங்க்ஷிகளாய்** - தங்களை ரக்ஷிக்கக்கூடியவரை விரும்பினவர்களாய், ஆர்-எவர், துணை - நம்மை ரக்ஷிப்பவர்களாக, ஆவார். நிற்கிறவளவிலே - சிந்தைப்பட்டுக்கொண்டிருக்கும் காலத்திலே. **ஏதஸ்மிந்** - இந்த, **அந்தரே** - நடுவில், **மஹாத்யுதி:** - மிகவும் காந்தியையுடையவராயும், **சங்கசக்ரகதாபாணி:** - சங்கம் சக்ரம் கதை இவைகளைக் கையில் தரித்துக்கொண்டவராயும், **பீதவாஸா:** - பீதாம்பரத்தைத் தரித்துக்கொண்டவராயும், **ஜகத்பதி:** - லோகங்களுக்கு ஸ்வாமியுமா

---

1 திருவாய்மொழி - 5 - 1 - 9 2 ராமா - பால - 15 - 16

ஷியான ஸர்வேஶ்வரன் அவகாஶம் பார்த்து, ரக்ஷணஸஹா

---

யுமிருக்கிற, விஷ்ணு: - விஷ்ணு, உபயாத: - வந்தார். இந்த ஸ்லோகத்தின் பதங்களின் தாத்பர்யத்தைத் தாமே நிரூபித்தருளு கிறார்— ஸர்வஶேஷியான' என்றாரம்பித்து. 'ஸர்வஶேஷி யான' என்றது 'ஜகத்பதி:' என்பதின் அர்த்தம். 'ஸர்வேஶ்வ ரன்' என்றது 'விஷ்ணு:' என்பதின் அர்த்தம். 'யோ லோகத்ரய மாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர:', 'ஈஶ்வரஸ்ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேஶேऽர்ஜுந திஷ்டதி' இத்யாதி வசனங்களினால் எவன் எல்லா ப்ராணிகளுக்குள்ளும் நுழைந்து வ்யாபரித்துக் கொண்டிருக்கிறானோ அவன் ஈஸ்வரன் என்று சொல்லப்பட் டிருப்பதினால். இவ்விடத்தில் விஷ்ணு என்கிற பதம் 'விஶ்ப்ரவே ஶநே' (விஶ என்கிற பதம் நுழைவதைச் சொல்லும்) என்கிற தாது பாடத்தினால் உள்ளே நுழைவதைச் சொல்லுகிறபடியினாலே அத் துடன் சேர்த்துச் சொல்லப்பட்ட எல்லாவற்றையும் நியமிப்பதாகிய ஸர்வேஸ்வரனாயிருப்பதையும் சொல்லுகிறது என்று திருவுள்ளம். 'அவகாஶம் பார்த்து' என்றது 'யத்ருச்சயா' என்பதின் அர்த்தம். அதாவது தன்னை ப்ரஸ்தாவிக்காமல் இருக்கும்பொழுதே பொதுவில் ரக்ஷகர் யார் என்றதை மாத்திரம் கொண்டு தன்னையே அவர்கள் ப்ரார்த்தித்ததாக நினைத்துவந்தான், அதற்குக் கார ணம் ஸர்வஶேஷியாகையினால், உடைமையைக் காப்பாற்றவேண்டி யது உடையவனுடைய கடமையன்றோ, ஆகையினால் அவர்கள் செய்த அல்பவ்யாஜத்தைக்கொண்டு தன்னையே விரும்பினதாக நினைத் துவந்தான் என்றபடி. அவர்கள் ப்ரார்த்திக்காமல் இருக்கும் பொழுதே ஶேஷஶேஷி பாவஸம்பந்தத்தைக்கொண்டே ரக்ஷித்தால் ஸர்வமுக்தி ப்ரஸங்கம் வருமாகையினால் ஒரு அல்பவ்யாஜத்தையா வது எதிர்பார்க்கும்படியாயிருந்தது. இவைகளையெல்லாம் திருவுள் ளத்தில் கொண்டு 'அவகாஶம் பார்த்து' என்றருளிச்செய்தபடி. 'ரக்ஷண' இத்யாதி - ஆஸ்ரிதர்களை ரக்ஷிப்பதினால் ஏற்படும் உத் ஸாஹத்தினால் உண்டான, புகர் - ப்ரகாஶம். இது 'உதாரத்ருதி:' என்பதின் தாத்பர்யம். ரக்ஷணோபகரணங்கள் - ஆஸ்ரிதர்

ஹத்தாலுண்டான புகர் தோன்றும்படி ரக்ஷணோபகரணங்களோடே கூட கட்டியுடுத்து வந்து தோற்ற, 1 'ஸித்தகந்தர்வயக்ஷாஶ்ச த்வாம் ஶரணம் கதா:' என்று தேவஜாதியிலுள்ளாரெல்லாரும் இருந்ததே குடியாக ஶரணாகதரானபடி சொன்னான். த்ரிஶங்கு ஶுந:ஶேபாதி வ்ருத்தாந்தங்களிலும் விஶ்வாமித்ராதி வ்யாபார விஶேஷங்களைச் சொல்லி ஶரணாகதரக்ஷணம் பரமதர்மமென்றும், ஸர்வகாருணிகவிஷய ஶரணாகதி ஸர்வாதிகாரமிதி யென்றும் காட்டினான்.

களை ரக்ஷிப்பதற்குக் கருவிகள். இது 'ஶங்கசக்ர கதாபாணி:' என்பதின் தாத்பர்யம். கட்டியுடுத்து - யுத்தம் செய்வதற்கு ஸித்தமாக வஸ்திராதிகளை இழுத்துக் கட்டிக்கொண்டு. இது 'பீதவாஸா:' என்பதின் தாத்பர்யம். எப்பொழுதும் பீதாம்பரத்தைத் தரித்துக் கொண்டிருக்கிற பகவானைப் பற்றி இப்பொழுது 'பீதவாஸா:' என்று தனித்துச் சொன்னதின் தாத்பர்யம் அதை விஶேஷித்துத் தரித்துக் கொண்டிருக்கிறான், அதாவது யுத்தத்திற்குஸித்தமாகக் கச்சைகட்டிக் கொண்டிருக்கிறான் என்பது. 'வந்து தோற்ற' என்பது 'உபயாத:' என்பதின் அர்த்தம். தத: - ஆகையினால், ஸித்தகந்தர்வயக்ஷாஶ்ச - ஸித்தர்கள் கந்தர்வர்கள் யக்ஷர்கள் உள்பட நாங்கள், த்வாம் - உம்மை, ஶரணம் கதா: - ஶரணமாக அடைந்தோம். இருந்ததே குடியாக - அவ்விடம் வந்திருந்தவர்களில் ஒருவர் கூடத் தவறாமல். 'த்ரிஶங்கு' இத்யாதி - த்ரிசங்கு, ஶுநஶ்ஶேபன் முதலியவர்களுடைய சரித்திரங்களைச் சொல்லும் இடங்களிலும். 'வ்யாபார' இத்யாதி - அவர்கள் ஶரணாகதி செய்ய விஶ்வாமித்திரர் அவர்களைக் காப்பாற்றினதும், அதாவது தம்முடைய தபஸ்ஸு முழுமையும் செலவழித்தாவது அவர்களைக் காப்பாற்றினதும், தன்னுடைய பிள்ளைகளில் ஒருவனைப் பதிலாகக்கொடுத்து ஶுநஶ்ஶேபனைக் காப்பாற்ற முயன்றதும் விவக்ஷிதம். பரமதர்மம் - எல்லாத் தர்மங்களைக் காட்டிலும் சிறந்ததான தர்மம். 'ஸர்வ' இத்

1 ராமா - பால - 15 - 25

இளையபெருமாள் 1 'ஸ ப்ராதுஶ்சரணௌ காடம் நிபீட்ய ரகுநந்தந: | ஸீதாமுவாசாதியஶா: ராகவம் ச மஹாவ்ரதம் ||' என்று உபாயவரிக்ரஹத்தைப் பண்ணி, இதுக்கு ஸஹமாக 'குருஷ்வ மாமநுசரம் வைதர்ம்யம் நேஹ வித்யதே | க்ருதார்த்தோऽஹம் பவிஷ்யாமி தவ சா

---

யாதி - ஸாமர்த்யமுடையவனையும் க்ருபையையுடையவனையும் இருப்பவனிடத்தில் செய்கிற ஶரணாகதி பலத்தைவிட்டுப் பிரியாதது, அதாவது அவஶ்யம் பலத்தைக்கொடுத்தே தீரும் என்றபடி.

இப்படிப் பாலகாண்டத்தில் ஶரணாகதியை நிரூபித்திருக்கும் ப்ரகரணங்களை அருளிச்செய்து, மேல் அயோத்யா காண்டத்தில் நிரூபித்திருக்கும் ப்ரகாரத்தை ஸங்க்ரஹித்தருளுகிறார் - 'இளையபெருமாள்' என்றாரம்பித்து. ஸ: - அந்த, அதியஶா: - அதிகக் கீர்த்தியையுடைய ரகுநந்தந: - ரகு வம்ஶத்தில் பிறந்தவராகிய இளையபெருமாள், ப்ராது: - தமையனாகிய ஸ்ரீராமனுடைய, சரணௌ - திருவடிகளை, காடம் - உறுதியாக, நிபீட்ய - பிடித்துக்கொண்டு, மஹாவ்ரதம் - பெரியவ்ரதத்தையுடைய, அதாவது ஶரணாகதர்களைக் காப்பாற்றுவது என்கிற வ்ரதத்தில் நிலைநின்றவருடைய, 'ஏதத் வ்ரதம் மம' என்று பெருமாள்தாமே அருளிச்செய்தாரிறே, ராகவம் - ஸ்ரீராமனையும், ஸீதாம் ச - ஸீதையையும், உவாச - சொன்னார். 'உபாய' இத்யாதி - ஸித்தோபாயமான பகவானை ஆஶ்ரயித்து, அன்றிக்கே ஶரணாகதியை அனுஷ்டித்து என்றாகவுமாம். மாம் - என்னை, அநுசரம் - உமக்குப் பின்றுடர்ந்து வருமவனாக, குருஷ்வ - செய்துகொள்ளும், இஹ - இந்த விஷயத்தில், வைதர்ம்யம் - விருத்தமான ஸ்வபாவம், அதாவது அவரவர்கள் ஸ்வபாவத்துக்கு விரோதம், ந வித்யதே - இல்லை, அஹம் - நான், க்ருதார்த்த: - க்ருதார்த்தனாக, அதாவது புருஷார்த்தத்தை அடைந்தவனாக, பவிஷ்யாமி - ஆகப்போகிறேன், தவ - உம்முடைய,

---

1 ரா மா - அயோ- 31 - 2, 24

ர்த்த: ப்ரஸஜ்யதே || பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கி ரிஸாநுஷு ரம்ஸ்யதே | அஹம் ஸர்வம் கரிஷ்யாமி ஜா க்ரத: ஸ்வபதஶ்ச தே ||' என்று பெருமாளும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்தியிலே தாம் அடிமை செய்ய அபேக்ஷித்தாரெ ன்று சொல்லுகையாலே உபாயோபேயபரவாக்யத்வயபர்ய வஸானமான ஶரணாகதிமந்த்ரவிஶேஷத்தை உபப்ரும்ஹித்தான்.

---

முற்பாடரானதேவர்கள் பண்ணின ப்ரபத்திக்காக ராவண வதத்திற்கெழுந்தருளுகையும்,பிற்பாடரானஸ்ரீபரதாழ்வான் பண் ணின ப்ரபத்திக்காகமீண்டு திருவபிஷேகம்பண்ணி ராஜ்யம்பண்

அர்த்த: - ப்ரயோஜனமும், ப்ரீதியும் என்றபடி, ப்ரஸஜ்யதே - உண்டாகிறது. உம்முடைய ப்ரயோஜனம் என்றதை மேல் விவரிக் கிறார். பவாம்ஸ்து-நீரோவெனில், வைதேஹ்யாஸஹ - ஸீதை யுடன் கூட, கிரிஸாநுஷு - மலைகளின் தாழ்வரைகளில், ரம்ஸ்யதே - விளையாடப் போகிறீர், அஹம் - நான், ஜாக்ரத:- விழித்துக்கொண்டும், ஸ்வபத: - தூங்கிக்கொண்டும் இருக்கிற, தே-உமக்கு, ஸர்வம் - எல்லாக் கைங்கர்யங்களையும், கரிஷ்யாமி- செய்யப்போகிறேன். 'உபாய' இத்யாதி - உபாயத்தையும் உபே யத்தையும் சொல்லும் இரண்டு வாக்யங்களாய் ஶரணாகதிக்குக் காரண மந்திரமான த்வயத்தை.

இப்படிக் கீழ் 'ஸமர்த்தகாருண்ணிகவிஷய......காட்டினன்' என்று அருளிச்செய்தது ஸங்கதமாகுமோ? பெருமாளிடத்தில் ஸ்ரீபர தாழ்வான் பண்ணிய ஶரணாகதிக்குப் பலம் இல்லாமல் போகவில் லையோ? என்கிற ஶங்கைகளுக்கு ஸமாதானம் அருளிச்செய்கிறார் - 'முற்பாடரான' என்றாரம்பித்து. தேவதைகள் முன்னாலேயே ராவ ணவதத்திற்காக ப்ரபத்தி செய்தமையினால் முதலில் அதற்குப் பலம் கொடுத்துப் பிறகு பின்னால் பண்ணிய ஸ்ரீ பரதனுடைய ப்ரபத்திக்

ணுகையும் விலம்பமானபடியாலே ஸ்ரீபரதாழ்வானுக்கு ப்ரபத்தி பண்ணினபோதே ஸாத்யமும் சடக்கெனத் தலைக்கட்டிற்றில்லையேயாகிலும், அவருக்கு கைகேயீ கலஹத்தாலே ஸஞ்ஜாதமான அவத்யம் தீரும்படி 1 'மரவடியைத் தம்பிக்கு வா

---

குப் பலம் அளித்தான் என்று தாத்பர்யம். 'விலம்பமானபடியாலே' என்பதினால் தேவதைகளினுடைய ப்ரபத்திக்கும் பரதாழ்வானுடைய ப்ரபத்திக்கும் ஒரேகாலத்தில் பலம் கொடுப்பது ஸம்பவிக்காதாகையினாலே ஒன்றுக்குப் பலம் கொடுத்த பிறகு மற்றொன்றுக்குப் பலம் கொடுக்க வேண்டியதாகையினால் ப்ரபத்தி செய்தகாலத்தின் க்ரமத்தை அனுஸரித்துப் பலம் கொடுத்தான் என்பது த்யோதிதம். திருவபிஷேகம் - பட்டாபிஷேகம். ஸாத்யமும் - முக்யமான ப்ரயோஜனம். சடக்கென - சீக்கிரமாக, தலைக்கட்டிற்றில்லையேயாகிலும் - செய்துமுடிக்கப் படவில்லையேயாகிலும், அதாவது பலம் உடனே கிடைக்கவில்லையே யாகிலும். 'கலஹத்தாலே' - அப்பொழுது பட்டாபிஷேகம்நடைபெறாமல் போகும்படி கைகேயி கலகம் செய்தமையினால். 'வரத்தாலே' என்று பாடாந்தரம், தசரத சக்ரவர்த்தியினிடம் கைகேயி வரம் பெற்றுக் கொண்டமையினால்என்றர்த்தம் ஸஞ்ஜாதமான-உண்டான, அவத்யம் - தோஷம், அதாவது ஸ்ரீபரதாழ்வான் ராஜ்யத்தில் ஆசையினால் தன் தாயாரைக்கொண்டு பட்டாபிஷேகத்துக்கு இடையூறு உண்டாகும்படி செய்தான் என்கிற அபவாதம். மரவடியை - ஸ்ரீபாதுகைகளை, தம்பிக்கு - தம்பியாகிய பரதனுக்கு, வான் - பெரியதான, பணயம் - பணயமாக, அதாவது ப்ரதிநிதியாக இவ்விடத்தில் 'பாதாவநி ப்ரபவதோ ஜகதாம் த்ரயாணாம் ராமாதபி த்வமதிகா நியதம் ப்ரபாவாத் । நோசேத் கதம் நு ஸஹஸா தமவேக்ஷ்ய மோஹாத் ப்ரத்யாயநம் ஸ்வபி வநம் ஸவதீ ஹவித்ரு ॥' (ஓ! பாதுகையே! மூன்று லோகங்களுக்கும் ஸ்வாமியாகிய ராமனைக்காட்டிலும் ப்ரபாவத்தினால் நீ மேற்பட்டவள், அப்படிக்கில்லாவிடில் ராமனையே அழைத்துக்கொண்டு போக

---

1 பெரியாழ்வார் திருமொழி - 4 9 - 1

ண்பண்ணியம் வைத்துப் போய் வானோர் வாழ' என்கிறபடியே அப்போது ஸாக்ஷாத்பலமான திருவடிகளுக்கு ப்ரதிநிதியான ஸ்ரீ சடகோபனாலே ஸாபல்யம் சொல்லி, பின்பு பூர்வப்ரதிஜ்ஞாதமான தேவகார்யமும் தலைக்கட்டினவாறே ஸ்ரீவால்மீகிவசனத்தாலே ஸாக்ஷாத்பலமான திருவடிகள் ஸ்வயமாகதங்களாய்

---

வந்த ஸ்ரீ பரதாழ்வானுக்கு நம்பக்கூடிய ப்ரதிநிதியாக நீ எப்படி யானாய்) என்று அருளிச்செய்திருப்பது இங்கனுஸந்தேயம். வைத்துப் போய், வானோர் - தேவதைகள், வாழ - வாழ்வதற்காக. 'அப்போது' என்பதற்கு அந்தக்காலத்தில் பூர்ணபலம் கிடைக்காமல் போயிற்றே ஒழிய பிற்பாடு கிடைத்துவிட்டபடியினால் பரதாழ்வானுடைய ப்ரபத்திக்குப் பலமில்லாமல் போகவில்லை என்று தாத்பர்யம். மேலும் அந்தக் காலத்திலும் உத்தேசித்த பலம் கிடைக்காமல் போனபோதிலும் பரதாழ்வானுக்கு நேர்ந்த அபவாதத்தின் நிவ்ருத்திக்காகத் திருவடிநிலையாழ்வாராகிற ப்ரதிநிதியினால்கிடைத்துவிட்டபடியினால் அந்த ப்ரபத்திக்குத் தத்காலத்திலும் பலம் கிடைக்காமல் போகவில்லை என்றருளிச் செய்கிறார்— 'ஸாக்ஷாத்பலமான' என்றாரம்பித்து. ஸாக்ஷாத்பலமான - ப்ரதானமாக உத்தேசிக்கப்பட்ட பலமான, ப்ரதிநிதியான-பதிலான, ஸ்ரீசடகோபனாலே - ஸ்ரீபாதுகைகளாலே, ஸாபல்யம் - பலம் கிடைத்தது என்பதை. இங்கு 'ராஜ்ஞ க்ஷோணிஹ்ருஷீவத்யாமஸேவநேன ப்ரபத்தே: ஸாபல்யம் நிஸ்சிதம் விபஸ்சித: நித்யம்யச்சரணம் ஸதாம்॥' (பகவானுடைய திருவடிகளில் பரிபூர்ணமாக ப்ரபத்தி செய்வதற்குப் பலம் எப்பொழுதும் ஸ்ரீபாதுகைகளை ஸிரஸால் தரிப்பதுதான் என்று பெரியோர்கள் நிச்சயிக்கிறார்கள்) என்றருளிச் செய்திருப்பது அனுஸந்தேயம். பூர்வப்ரதிஜ்ஞாதமான-முன்னால்பிரதிஜ்ஞைசெய்த, தேவகார்யமும் - தேவதைகளினுடைய ஶரணாகதிக்கு பலம். ஸ்வயமாகதங்களாய் - தானே வந்து, அயத்நஸுலபங்களானபடி - ஸ்ரீபரதாழ்வானுடைய ப்ரயத்தினம் ஒன்றும் இல்லாமல் கிடைத்தபடியை. இத்தால் முன்பு சித்திரகூடத்தில் பண்ணிய ப்ரபத்தியின் பலம் க்ரமப்படி பர

ஸ்வதர்மங்களானபடி சொன்னான் அப்படியே 1 ‘த்வாமாமநந்தி கவய: கருணாம்ருதாப்தே ஜ்ஞாநக்ரியாபஜநலப்ய மலப்யமந்யை: । ஏதேஷு கேந வரதோத்தரகோஸலஸ்தா: பூர்வம் ஸதூர்வமபஜந்த ஹி ஜந்தவஸ்த்வாம் ॥’ என்றும், 2 ‘புற்பா முதலாப் புல்லெறும்பாதி ஒன்றின்றியே நற்பாலயோத்தியில் வாழும் சராசர முற்றவும் நற்பாலுக் குய்த்தனன்

---

தாழ்வானுக்குக் கிடைத்துவிட்டது, ஆகையினால் பரதாழ்வானுடைய ப்ரபத்திக்குப் பலம் கிடைக்கவில்லை என்று சொல்லுவது எவ்விதத்திலும் பொருந்தாது. இதற்குமேல் அயோத்தியா பட்டணத்தில் இருந்த சராசரங்களை ‘அன்று சராசரங்களை வைகுந்தத்தேத்தி’ என்கிறபடியே ஸ்ரீவைகுண்டத்தை அடையும்படி செய்ததற்கு அவர்கள் ப்ரபத்தியை அனுஷ்டிக்கவில்லையே, ஆகையினால் ப்ரபத்தி செய்யாவிட்டாலும் மோக்ஷம் கிடைக்கலாமே என்கிற ஶங்கைக்குப் பரிஹாரம் அருளிச்செய்கிறார்—‘அப்படியே’ என்றாரம்பித்து. கருணாம்ருதாப்தே - தயையாகிற அம்ருதம் நிறைந்த கடலாகிய பகவானே, த்வாம் - உம்மை, கவய: - ரிஷிகள், ஜ்ஞாநக்ரியாபஜநலப்யம் - ஜ்ஞானயோகம், கர்மயோகம், பக்தியோகம், இவைகளினால் அடையத் தகுந்தவனாகவும், அந்யை: - வேறு எந்த உபாயங்களினாலும், அலப்யம் - அடையத் தகாதவனாகவும், ஆமநந்தி - சொல்லுகிறார்கள், வரத - ஓ! வரதனே! உத்தரகோஸலஸ்தா: - உத்தரகோஸலத்தில் இருந்த, ஜந்தவ: - ப்ராணிகள், ஸதூர்வம் - புல் உள்பட, ஏதேஷு - கீழ்ச் சொல்லிய உபாயங்களில், கேந - எந்த உபாயத்தினால், பூர்வம் - முற்காலத்தில், த்வாம் - உம்மை, அபஜந்த - அடைந்தார்கள். பா - படர்ந்திருக்கிற, புல், முதலாம் - முதலாகிய, புல் - த்ருணம், முன் பூமியோடு ஸம்பந்தப்பட்ட புல் சொல்லப்பட்ட படியினால் இது ஓங்கி வளரும் கோரை முதலியவற்றைக் குறிக்கிறது, எறும்பு, ஆதி - இவை முதலிய வஸ்துக்களில், ஒன்று - ஒரு வஸ்துகூட, இன்

---

1. வரதராஜஸ்தவம் - 60 2 திருவாய்மொழி - 7-5-1.

நான்முகனார் பெற்ற நாட்டுளே' என்றும் பேசுகிறபடியே ஜங்கம ஸ்தாவர விபாகமற உபாயாதிகார ப்ரஸங்க ரஹிதமான ஜந்துக்களையும் ஸ்ரீபரதாழ்வான் பண்ணின ப்ரபத்தியினாலே அவருடைய விஷயவாஸமாத்ரமே பற்றாசாகப் பின்பு ரக்ஷிக்கும் ப்ரகாரத்திற்குப் புறம்செயலான 1 'தைவயம் பவதா ர

---

ரியே - இல்லாமல், அதாவது விட்டுப் போகாமல், நற்பால் - நல்ல இடமாகிய, அதாவது இப்படிப்பட்ட பகவானுடைய க்ருபைக்குப் பாத்திரமாகக்கூடிய இடமாகிய, அயோத்தியில், வாழும் - வாழ்கிற, அயோத்தியில் ஜன்மத்தையடைந்ததே இவைகளுக்கு வாழ்வு, 'கோஸலஜநபதஜநிதநிகிலஜங்கமஸ்தாவரஜந்துஜாத' (கோஸல தேஸத்தில் பிறந்ததினாலேயே க்ருதார்த்தங்களான ஜங்கமம் ஸ்தாவரம் இவைகளாகிய ப்ராணிகளின் கூட்டங்களுக்கு) என்றிவர்தாமே அருளிச்செய்திருப்பது அநுஸந்தேயம், சராசரம் - ஜங்கமம், ஸ்தாவரம் இவைகள், முற்றவும் - எல்லாவற்றையும், நான்முகனார்பெற்ற - ப்ருஹ்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட, நாட்டுளே - தேஸத்திற்குள்ளே, அண்டத்திற்குள்ளே என்றபடி, நற்பாலுக்கு - நல்ல இடத்திற்கு, அதாவது தன்னிடத்தில் வஸிப்பவர்களுக்கு பக்தியோகத்தை வ்ருத்தி செய்யக்கூடிய ஸாந்தானிக லோகத்திற்கு, உய்த்தனன் - சேர்ப்பித்தான். விபாகமற - வ்யத்யாஸம் இல்லாமல், 'உபாயாதிகார' இத்யாதி - உபாயத்தை அநுஷ்டிப்பதில் அதிகாரம் உண்டென்கிற ப்ரஸ்தாவமே இல்லாத. விஷயவாஸமாத்ரமே - அவருடைய அபிமானத்திற்குப் பாத்திரமான தேஸத்தில் வஸிப்பது மாத்திரத்தையே, பற்றாசாக - ஆதாரமாக, பிடிப்பாக என்றபடி. பின்பு - அவதாரத்தை முடிக்கும் ஸமயத்தில், ரக்ஷிக்கும் ப்ரகாரத்திற்கு - அப்படி ஸாந்தானிக லோகத்திற்கு அழைத்துக்கொண்டு போய், அங்கிருந்து தன்னை அடையும்படி செய்ததற்கு. புறம்செயலான - வெளியில் ப்ரகாசிக்கும்படி செய்கிற கார்யமாகிய, அதாவது ஸூசகமான என்றபடி, பவத்விஷயவாஸிந: - உம்முடைய

---

1. ராமா - ஆரண் - 1-20.

க்ஷ்யா ஹவத்விஷயவாஸிந: | நகரஸ்தோ வநஸ்தோ வா த்வம் நோ ராஜா ஜநேஶ்வர!' என்கிற ரிஷிகள் வாக்யத்தின்படியே அவர்களுக்கு விரோதிகளான ராக்ஷஸரை நிராகரித்து ரிஷிகளை ரக்ஷித்தபடி சொல்லுகையாலே ரக்ஷாபேக்ஷை பண்ணும்போது வேறொரு உபகாரம் பண்ணவேண்டா, ஸ்வாபிமாந ஶ்ரீவாஸமான விஷயத்தில் துவக்காலே ஸ்வாநந்யஶரணதையை வெளியிட்டுக் கிடக்கவே அமையுமென்று திருக்கண்ணமங்கை

---

தேஶத்தில் வஸிக்கிற, தேவயம் - அந்த நாங்கள், ஹவதா - உம்மால், ரக்ஷ்யா: - ரக்ஷிக்கப்படத்தக்கவர்கள், ஜநேஶ்வர - ஜனங்களுக்கெல்லாம் ராஜாவாகிய ஸ்ரீராமனே! நகரஸ்த: - பட்டணத்தில் இருந்தாலும், வநஸ்தோவா - காட்டில் இருந்தாலும், த்வம் - நீர், ந: - எங்களுக்கு, ராஜா - அரசன். ரக்ஷாபேக்ஷை பண்ணும்போது - ரக்ஷிக்கவேண்டுமென்று பகவானை ப்ரார்த்திக்கும்பொழுது. இங்கு இன்னதென்று அருளிச்செய்யாமையினாலும், பரதாழ்வான் செய்த ப்ரபத்தியினாலேயே அவைகளை ரக்ஷித்தபடியை அருளிச்செய்கையாலும் தானாவது ஆசார்யாதிகளாவது ரக்ஷாபேக்ஷை பண்ணும்போது பகவான் ரக்ஷிப்பான் என்பது விவக்ஷிதம். ஸ்வாபிமாநஶ்ரீவாஸமான - பகவானுடையதோ அல்லது ஆசார்யாதிகளினுடையதோ இது என்னைச் சேர்ந்தது என்கிற அபிமானத்திற்குப் பாத்திரமான. அன்றிக்கே பகவானுடைய அபிமானத்திற்குப் பாத்திரமான தேசத்திலேயாவது அப்படிப்பட்ட ஆசார்யர்கள் திறத்திலாவது என்றர்த்தமாகவுமாம். 'விஷய' என்பது தேசத்தையும் ஆசார்யாதிகளையும் குறிக்கிறது. துவக்காலே - ஸம்பந்தத்தினாலே, ஸ்வாநந்யஶரணதையை - வேறு ஒரு ரக்ஷகர் இல்லை என்பதை, வெளியிட்டு - ப்ரகாசம் செய்துகொண்டு, கிடக்கவே - இருப்பதே, அமையும் - போதும், 'திருக்கண்ணமங்கையாண்டான்படி' என்றது திருக்கண்ண மங்கையாண்டான் என்பவர் வீதியில் போய்க்கொண்டிருக்கும்பொழுது ஒருவன் வீட்டு வாசலில் கிடந்ததொரு நாயை வழியில் போன ஒருவன் அடித்துக் கொன்றுவிட்டதைப் பார்த்து அவன் அவனையும் குத்திக் கொன்றுவிட்டுத்

யாண்டான் படியே 1 ‘ கடைத் தலையிருந்து வாழும் சோம்பரை யுகத்தி ’ என்னும் அபய[illegible]த்தை வெளியிட்டான்.

---

தானும் குத்திக்கொண்டு ப்ராணனை விட்டதைப் பார்த்து தேஹமே ஆத்மா என்கிற அபிமானத்தை உடைய இவன் இப்படிச் செய்தால் ஸர்வஜ்ஞனாகிய பகவான் நம்மை யமபடர்கள் கையில் காட்டிக் கொடுக்கமாட்டான் என்று நிஸ்சயித்து அப்படியே பெருமாள் ஸந்நிதித் திருவாசல்விட்டு அகலாமல் கிடந்தார். அவரைப்போலப் பகவானுடைய அபிமானத்திற்கு விஷயமான இடத்தில் வஸிப்பதே அவன் ரக்ஷிப்பதற்குப் போதுமானது, அதாவது ப்ரபத்தி பண்ணின பிறகு தன்னுடைய கார்யங்களைச் சிந்திக்காமல் நிர்ப்பரனாய் பரஸ்வீகாரம் பண்ணின எம்பெருமான் விஷயத்தில் கைங்கர்யாதிகள் செய்யவில்லையேயாகிலும் அவனுடைய அபிமானத்திற்கு விஷயமான தேசத்தில் வஸிப்பதே இவனுடைய உத்தாரக்ருதயம் என்பது ஸூசிப்பிக்கப்பட்டது. இதற்கு ப்ரமாணம் காட்டியருளுகிறார் - ‘கடைத்தலை’ இத்யாதி - கடைத்தலை - தலைக்கடை என்பதுமாறி கடைத்தலை என்றிருக்கிறது, வாசல்படி என்றபடி, அன்றிக்கே கடைசி இடம், அதாவது அபிமானத்திற்கு விஷயமான இடத்தில் கடைசி இடம் என்றுமாகவுமாம், இருந்து - வஸித்துக்கொண்டு, இருந்து வாழும்-இப்படி இருப்பதே இவனுக்கு வாழ்வுஎன்றபடி, சோம்பரை- செய்யவேண்டிய கார்யத்தின் பரத்தை உன் தலையில் வைத்துவிட்டுத் தங்களுடைய நன்மையைத் தேடிக்கொள்ளுவதில் கவலையில்லாமல் சோம்பி இருப்பவரை, உகத்தி - ஸந்தோஷப்படுகிறாய். ஆகஇத்தால்- அயோத்தியா பட்டணத்தில் ஜந்துக்களை ரக்ஷித்தது பரதாழ்வானுடைய ப்ரபத்தியில் அவருடைய அபிமான கோசரர்களாயிருந்தமையினாலும் அப்படியே ரிஷிகளில் சிலர் ப்ரார்த்தித்ததை மாத்திரம் கொண்டு அவர்களுடைய அபிமானத்திற்கு விஷயமானமற்ற எல்லோரையும் காப்பாற்றினபடியினாலும் சிலரே ப்ரார்த்தித்திருந்தாலும் அவர்களுடைய அபிமானத்திற்கு விஷயமான மற்றவர்களையும் காப்பாற்றுவான் என்பது தெரிவிக்கப்பட்டதாகிறது. ‘ப்ராஞ்ஜலயஃ’ என்று ஸரணாகதியின் ஏகதேஸமான அஞ்சலியைச் சொல்லியி

1. திருமாலை - 38.

ருப்பதினுலும், 'ஆ' என்கிற உபஸர்க்கத்தினுல் புத்தி பூர்வகமாகச் செய்யப்பட்டமை சொல்லப்பட்டபடியினுலே அனுஸந்தானமும் ஏற்படுகிறபடியினுலும், 'ஶ்ரியம் வாஞ்சம் ஸ்வஸ்வஸ்த்யம் ஶூப்ரஜம்வு ஶஹாந்தநா: । நிவேதயிகோ' என்று சொல்லியிருக்கிறபடியினுலே ஆத்மீய ஸமர்ப்பணம் சொல்லப்படுகிறபடியினுலும், 'ஶரண்யம்' என்பதினுலும் மஹரிஷிகள் ஶரணுகதி செய்தார்கள் என்பது ஸ்ரீமத்ராமாயணத்தில் சொல்லப்பட்டிருக்கிறது என்றறியத்தக்கது. 'ரக்ஷிதவ்யா த்வயா ஶஶ்வத்' என்பதினுல் ப்ரபத்தியின் அங்கமான ரக்ஷாபேக்ஷையும் சொல்லப்பட்டதாகிறது. 'ஶஹாஶ்ரீ தாஸவோயநா:' என்பதினுல் இப்படி ரக்ஷிக்கும்பொழுது தங்களுடைய வ்யாபாரத்தை எதிர்பாராமல் ரக்ஷிக்கவேண்டும் என்றேற்படுகிறபடியினுல் நிரபேக்ஷ ரக்ஷகத்வமாகிற உபாயத்வ ப்ரார்த்தனையும் செய்யப்பட்டதாயிற்று. 'தவெோயநா:' என்பதினுல் எல்லாத் தபஸ்ஸிலும் உயர்ந்ததான தபஸ்ஸு ஶரணுகதி என்று ஶ்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறபடியே ஶரணுகதியாகிற தபஸ்ஸையே தனமாக உடையவர்கள் என்பதும் சொல்லப்பட்டதாகிறது. ஆகையினுல் தாங்கள் தங்களை ரக்ஷித்துக்கொள்ள மாட்டாமையைத் தெரிவித்து ப்ரார்த்தனையுடன் கூடிய ஆத்மாத்மீய பரந்யாஸம் சொல்லப்பட்டதாகிறது என்று அந்த ப்ரகரணத்தின் வ்யாக்யானத்தில் ஸ்பஷ்டமாக ஏற்படுகிறது. 'தெய்வம்' இத்யாதியையும் 'நற்பாலயோத்தி' இத்யாதியையும் உதாஹரித்து, 'என்றும் சொல்லுகிற பாகவதாபிமான பகவத் விஷய வாஸாதிகளுக்கும் தன் பக்கலிலேயாதல் பிறர் பக்கலிலேயாதல் முன்பேயாதல் பின்பேயாதல் ஒரு உபாயத்துவக்குண்டு' என்று இவர்தம்மாலேயே அருளிச்செய்யப்பட்டிருப்பதினுல் இவைகள் ப்ரபத்தி பண்ணினவனுக்கு உபகாரங்களாகும், ப்ரபத்தி பண்ணுதவனுக்கும் ஆசார்யாதிகள் மூலமாகவோ ஸ்வயமாகவோ அதைச் செய்யும்படி மூட்டி ரக்ஷிக்குமேயல்லாமல் விஷயவாஸாதிகள் மோக்ஷத்திற்கு நேரில் உபாயங்களாக மாட்டா என்னப்பட்டதாயிற்று. ஆகையால் உபாயம் அனுஷ்டிக்காமல் மோக்ஷம் வரும் என்கிற ஶங்கைக்கு இடமில்லை.

இவ்விடத்தில் உத்தரராமாயணத்தில்* 'ச்ருத்வா து விஷ்ணுவசனம் ப்ரஹ்மா லோககுரு: ப்ரபு: | லோகாந் ஸாந்தாநிகாந் நாம யாஸ்யந்தீமே ஸமாகதா: ||' என்றும், 'யச்ச திர்யக்கதம் கிஞ்சித் மாமேவமனுசிந்தயத் | ப்ராணாம்ஸ்த்யக்ஷ்யதி பக்த்யா வை தத்ஸந்தானே நிவத்ஸ்யதி || ஸர்வைர்ப்ரஹ்மகுணைர்யுக்தே ப்ரஹ்மலோகாதனந்தரே |' என்றும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறது. ஸ்ரீபாதுகாஸாஹஸ்ரத்தில்நிர்யாதனைபத்ததியில்† 'உபாஸ்ய வர்ஷாணி சதுர்தச த்வாம் உத்தாரிகாம் உத்தரகோஸலஸ்தா: ஸநந்தநாத்யைரபி துர்விகாஹம் ஸாந்தாநிகம் லோகமவாபுரக்ர்யம் ||' என்றிவர் தாமும் அருளிச்செய்திருக்கிறார். கீழ் உதாஹரித்த 'நற்பால்' இத்யாதி பாட்டின் வ்யாக்யானமாகிய ஆறாயிரப்படியில் கர்மயோகாத்யுபாயம் பண்ணாதிருக்கச்செய்தேயும் திருநாட்டிலுள்ளாரைப்போலே தன் திருவடிகளை தாரகபோஷகபோக்யங்களாக்கினான் என்றும், இப்படியே இருபத்திநாலாயிரப்படியிலும் அருளிச்செய்யப்பட்டிருக்கிறபடியினால் 'நற்பால்' என்பதற்கு நல்ல ஸ்வபாவத்தை உடையவைகளாய்ப் பண்ணினார் என்று அர்த்தம் ஏற்

* லோகங்களை ஸ்ருஷ்டித்தவராய் ப்ரபுவான ப்ரும்மா அந்த விஷ்ணுவின் வார்த்தையைக் கேட்டு இவர்கள் எல்லோரும் கும்பலாகச் சேர்ந்து ஸாந்தானிகம் என்கிற லோகங்களை அடையப்போகிறார்கள். இப்படியே திர்யக்ஜாதியில் பிறந்த எந்த ப்ராணியும் பக்தியினால் உம்மையே நினைத்துக்கொண்டு ப்ராணன்களை விடப்போகிறது, அதுவும் ப்ரும்மகுணங்கள் எல்லாவற்றுடன் சேர்ந்ததும் அதாவது எல்லாவற்றையும் பற்றிய அனுபவத்தைக் கொடுக்கக்கூடியதும் ப்ரும்மலோகத்திற்கு ஸமீபத்திலும் இருக்கிற ஸாந்தானிக லோகத்தில் வஸிக்கப்போகிறது. †(ஓ! பாதுகையே!) எல்லா ஜனங்களுக்கும் உஜ்ஜீவனத்தைக் கொடுக்கிறவளான உன்னை உத்தரகோஸலத்தில் வஸிக்கும் ஜனங்கள் பதினாலு வருஷம் ஆராதனம் செய்து ஸநந்தனாதிகளினாலும் அடையமுடியாத உயர்ந்த ஸாந்தானிகம் என்னும் லோகத்தை அடைந்தார்கள்.